முதற் பதிப்பு : டிசம்பர், 1986
இரண்டாவது பதிப்பு : நவம்பர், 1987
மூன்றாவது பதிப்பு : மே, 1988
நான்காவது பதிப்பு : மே, 1989
ஐந்தாவது பதிப்பு : பிப்ரவரி, 1990

திருநாவுக்கரசு தயாரிப்பு

விலை ரூ. 10-00

ஆசிரியர் முகவரி
**Dr. M. S. Udayamurthi**
Vilanagar
Arupathy P. O.
Mayiladuthurai T. K.
Tamil nadu
609 305

மாருதி பிரஸ்
173, பீட்டர்ஸ் ரோடு
சென்னை-600 014

# முன்னுரை

மனித உறவுகள் மிக நுட்பமானவை. சிறு முகமலர்ச்சியில்கூட—கண்களின் பாவத்தில்கூட—ஒரு உறவின் தன்மையைப் புரிந்துகொள்ளலாம். நமது உறவை சிறு செயல்கள் கூட வெளிப்படுத்திவிடுகின்றன.

வார்த்தைகளை மூடி மறைக்கலாம். ஆனால் நம் உணர்வுகளை மூடி மறைக்கமுடியாது.

உறவுகள் அறிவு பூர்வமாகப் பின்னப்படுவதில்லை! உணர்வு எனும் வலையால் அவை விஸ்தரிக்கப்படுகின்றன. உணர்வுகளின் ஆழம்தான் உறவின் வலிமை.

ஒரு பச்சிளங் குழந்தையைப் பார்க்கிறோம். எத்தகைய உறவு ஏற்படுகிறது? எத்தகைய உணர்வு நம்முள் எழுகிறது? யோசித்துப் பாருங்கள்.

நமது காதலியை அல்லது காதலனைப் பார்க்கிறோம். எத்தகைய உணர்வுகள் நம்மை ஆட்கொள்கின்றன? நம்மை முந்துகின்றன? எண்ணிப்பாருங்கள்.

ஒரு தலைவன் தான் காணும் லட்சிய உலகைப் பற்றிப் பேசுகிறான். ஏன் நாம் சிலிர்த்தெழுகிறோம்? எத்தகைய உறவுக்கு, தியாகங்களுக்கு நம்மைத் தயார் செய்துகொள்கிறோம்? ஏன்? ஒருகணம் சிந்தித்துப் பாருங்கள்.

கருணையின் வடிவான ஒரு ஞானியைத் தரிசிக்கிறோம். எத்தகைய உணர்வுகள் நம்முள் எழுகின்றன? ஞானிக்கும் நமக்கும் என்ன தொடர்பு ஏற்படுகிறது? ஆராய்ந்து பாருங்கள்.

மேற்கண்ட சம்பவங்களிலெல்லாம் நமது மனம் தர்க்கவாத அறிவைத் தாண்டிச் செயல்படுகிறது. எங்கோ

ஆழத்திலிருக்கும் ஆத்ம தாகமாக, ஜீவனின் அடிப்படை உணர்வாக (instinct) இது பீறிட்டெழுகிறது.

உறவுகளைப் பல நிலைகளில் நாம் காண்கிறோம். அன்பு, நட்பு, காதல், பாசம், ஈடுபாடு, மரியாதை, பக்தி என்று பல நிலையில் நமது உறவுகள் இயங்குகின்றன. ஆராய்ந்து பார்க்குமிடத்து இவை பரஸ்பர நம்பிக்கையில் எழுகின்றன. அத்துடன் ஒரு ஜீவன், மற்றோர் ஜீவனில் உள்ள உண்மையைத் தொடத் துடிக்கும் ஒரு அற்புத இயக்கத்தையும் காண்கிறோம். அது ஒரு ஜீவ நதியாக நம்மிடமிருந்து பொங்கிப் பிரவகிக்கிறது.

அந்த ஜீவ நதிகளின் சங்கமத்தில் மனிதன் ஒரு நிறைவைக் காண்கிறான்.

குழந்தையின் அழகில் ஒரு நிறைவு காதலியின் அன்பில் ஒரு நிறைவு. தலைவனின் லட்சிய ஈடுபாட்டில் ஒரு நிறைவு. ஞானியின் தரிசனத்தில் ஒரு நிறைவு. வாழ்வு என்பது இப்படி ஒரு நிறைவை நோக்கி—ஒரு பூரணத்துவத்தை நோக்கி—ஓடும் முயற்சிதான். இந்த முயற்சியில் தான் மனிதன் தேவத்தன்மை பெறுகிறான்.

உறவுகளின் தாத்பரியம் என்ன? இவ் வுலகில் எல்லாம் ஒன்றையொன்று சேர்ந்து, தழுவி, நம்பி வாழ்கின்றது என்பதுதான். இதுதான் பேருண்மை.

சூரிய ஒளியை நம்பிச் செடி வாழ்கிறது. காற்றை நம்பி நம் மூச்சு வாழ்கிறது. கடல் நீரை நம்பி மழை வாழ்கிறது. பாறை சூரிய ஒளியின் மூலமும் மழையின் மூலமும் மண்ணாகி நிலமாகிறது.

ஒன்றை ஒன்று சார்ந்து வாழும் உறவு கொண்ட இப் பிரபஞ்சத்தின் தன்மையை நாம் புரிந்துகொள்ளும்போது நமக்கும் பிற மனிதர்களுக்கும்—நமக்கும் சூழ்நிலைக்குமுள்ள உறவுகளை மதிக்கவும் போற்றவும் கற்றுக்கொள்கிறோம். பரஸ்பரத் தொடர்பில்—பரஸ்பர உதவியில்

வாழ்வதற்காகத்தான் இந்தச் சமுதாயம் படைக்கப் பட்டிருக்கிறது என்பதை உணர்கிறோம்.

இதை நாம் உணரும்போது இவ்வுறவுகளின்மூலம் நம்மை மேம்படுத்திக்கொள்ள முடியும்; ஊர் உலகையும் மேம்படுத்த முடியும். ஆழ்ந்து நோக்குமிடத்து மனித உறவு களை வளர்ப்பதிலும், அதை ஒரு சமதளத்தில் வைத்துக் கொள்வதிலும், அந்த உறவெனும் கயிறுமூலம் பிற ஜீவன் களைத் தொடுவதிலும், அப்படித் தொட்டு அவர்கள் வாழ்வை மலரச் செய்வதிலும்தான்—வாழ்வின் பயன் அமைந்திருக்கிறது

உறவை மூன்று பிரிவாக வகைப்படுத்த முடியும் என்று நாம் எண்ணுவதுண்டு.

நமக்கும், நமக்குமுள்ள உறவு முதல் வகை. நாம் நம்மை மதிக்கிறோமா, நேசிக்கிறோமா, மரியாதையுடன் நடத்துகிறோமா என்பதுதான் நமக்கும் நமக்குமுள்ள உறவு. நாம் செய்வது நமக்கே பிடிக்கவில்லை என நாமே கரித்துக் கொட்டினோமானால்—தண்டித்துக்கொள்வோ மானால் நம்மை நாமே சிறுமைப்படுத்தியவர்களாவோம். நம்மில் உள்ள ஜீவ ஆத்மாவை வளர்க்க—பெருமைப்படுத்த நாம் முயலவேண்டும்.

அடுத்து நமக்கும் நம் குடும்பத்திற்கும் இந்தச் சமுதாயத் திற்குமுள்ள உறவு. இதுதான் நாம் பின்னும் வலை. இந்த வலையின்மூலம்தான் நாம் வலிமை பெறுகிறோம். இதை உபயோகித்துத்தான் வாழ்வின் லட்சியங்களை அடைகிறோம். இது பரஸ்பர நம்பிக்கையிலும் நல்லெண் ணத்திலும் அன்பிலும் துவங்குகிறது. இது இரண்டாவது வகை.

இது சமநிலையில் இல்லாதபோது சூழ்நிலையில் ஏற்றத் தாழ்வுகள், பிணக்குகள், மனத்தாங்கல்கள், கோபம், போட்டி, பொறாமை, வஞ்சினம் என்று நமது மன அமைதி யையும் குடும்ப வாழ்க்கையையும், சமுதாய வாழ்க்கையை யும் இது பாதிக்கிறது. ஒரு தனி மனிதன் இவ்வுலகின் ஜீவ

ராசிகள் அனைத்தையும் தொடும் ஒரு அன்பு வலையைப் பின்னமுடியும். அப்படிப் பின்னியவர்கள்தான் புத்தர், ஏசு, மகாத்மா காந்தி, முகம்மது. நல்லவர்களும், நாட்டுத் தலைவர்களும் அப்படி வலை பின்னுபவர்களே.

மூன்றாவதாக இருக்கும் உறவு, நமக்கும் இப் பிரபஞ்சத்திற்கும் உள்ள ஒரு உறவு. "நான் யார்?" "ஏன் இங்கு வாழ்கிறேன்?" "இவ் வாழ்வின் நோக்கமென்ன?" "இப் பிரபஞ்சம் ஏன் இப்படி இயங்குகிறது? அதில் என்னுடைய வேலை என்ன?" என்பன போன்ற கேள்விகளை மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவரும் ஒரோர் சமயத்தில் கேட்காமல் இருந்ததில்லை. "நாம் இப் பிரபஞ்சத்தின் ஒரு பகுதி. நாம் இந்தப் பிரபஞ்சத்தின் மூலத்தைத் தொட முடியும். நாம் இப் பிரபஞ்ச மூலத்தை அறியமுடியும்!" என்கிற ஞானம்தான் நமது மூன்றாவது வகை உறவு என்று நான் நினைப்பதுண்டு. ஏதோ நான் தத்துவ ரீதியாக எழுதுவதாக நீங்கள் எண்ணக்கூடும். உறவுகளின்மூலம் நாமும் நம் சூழ்நிலையும் மேம்பட முடியும். அதற்குத் தத்துவ விளக்கங்கள் உதவுகின்றன.

உலகில் எல்லாவகைப் பிரச்சினைகளையும் அணுகி அலசி ஆராய்ந்தோமானால் இயற்கை விளைவித்த பிரச்சினைகள் என்று சில இருக்கின்றன. இடி, மின்னல், மழை, பூகம்பம், எரிமலை, வெள்ளம், வறட்சி என்று நம்மை மீறிய ஒரு பெருஞ் சக்தியினால் ஏற்படுகின்ற பிரச்சினைகள்.

இரண்டாம் வகைப் பிரச்சினை: இவ் வுலகம் பூராவிலும், மனிதமனம் ஏற்படுத்துகின்ற பிரச்சினைகள்தான். மனித மனங்களுக்கிடையே ஏற்படும் உறவுப் பிரச்சினைகள்தான்.

ஒரு விளையாட்டுப் பொம்மையை யார் வைத்துக் கொள்வது என்பதில் இரண்டு குழந்தைகளுக்கிடையே ஏற்படும் சண்டை; ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதி யாருக்குச் சொந்தம் என்று இரண்டு நாடுகள் போட்டுக்கொள்ளும் யுத்தம்—இவை இரண்டும் பரஸ்பர நம்பிக்கையின்மை

யாலும், விட்டுக்கொடுக்கும் மனோபாவமின்மையாலும் விளையும் விஷயங்கள்; சரியான உறவின்மையால் விளையும் விஷயங்கள்.

கணவனுக்கும் மனைவிக்கும் ஏற்படும் கருத்து வேற்றுமைகள்; இரண்டு மதங்களிடையே ஏற்படும் பூசல்கள்—இவை இரண்டும் மற்றவர் தனித்தனி கருத்துச் சுதந்திரத்திற்கு முழு உரிமையுள்ளவர் என்ற அடிப்படை உறவின் தன்மையை உணராததால் விளையும் விஷயங்கள். உறவின் சமத்துவத்தை மதிக்காததால் விளையும் விஷயங்கள்.

வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்கிற நாட்டாண்மைக்காரத்தனமும், எதிர்க்கட்சிக்காரன் என் எதிரி என்ற மனப்போக்கும் ஆணவத்தினால் விளையும் விஷயங்கள். "மனித உறவில் நாம் யார்? இப்பிரபஞ்சத்தில் நாம் யார்? பிறர் யார்?" என்பதை உணராததால் விளையும் விஷயங்கள்.

அன்பும், தர்மநெறிகளும், சுயமதிப்பும், தவற்றை ஏற்றுக்கொள்ளும் பக்குவமும், பிறர் குறைகளை மன்னிக்கும் மனோபாவமும் வாழ்வில் நிறையும்போது நமது உறவுகள் மலர்ந்து மணம் வீசுகின்றன.

ஒருவருடன் ஒருவர் இனிமையாகப் பழகுவதற்காகவும் உதவிசெய்து வாழ்வதற்காகவும்தான் நாம் படைக்கப் பட்டிருக்கிறோம். இவ் வுலகம் படைக்கப்பட்டிருக்கிறது. இவ் வுலகில் நாம் எல்லோரும் சக பயணிகள்.

உறவுகளைப்பற்றி எண்ணும்போது பிரார்த்தனைக்குச் செயல்வடிவம் கொடுக்கமுடியுமா என்று நான் யோசிப்பதுண்டு.

பிரார்த்தனை என்பது என்ன?

நமது வலிமையையும் நலன்களையும் பெருக்க ஆண்டவனிடம் நாம் விடுக்கும் வேண்டுகோள்களைத்தான் பிரார்த்தனை என்று சொல்கிறோம்.

உண்மையில் இதைவிட நலன் விளைக்கும் ஒரு முறை இருக்கிறது. ஊர் உலகிற்கும், நம்மைச் சுற்றியுள்ள சமுதாயத்திற்கும் பயன்படுவதில் அந்த 'நமது நலம்' இருக்கிறது. இந்த உண்மையைத்தான் "ஏழையின் மகிழ்வில் இறைவனைக் காணலாம்" என்றும் "மக்கள் தொண்டே மகேசன் தொண்டு!" என்றும் கூறுகிறார்கள்.

இருப்பவர் இல்லாதவர்க்கும், படித்தவர் படிக்காத வருக்கும், வலிவுள்ளவர் நலிவுற்றவருக்கும் கடமைப்பட் டிருக்கிறார்கள்.

பிரார்த்தனையின் செயல்வடிவம் அந்தக் கடமைதான்; அந்த உறவுதான்; அந்தத் தொண்டுதான்; நான், என் குடும்பம் என்று நிற்காமல் செய்யும், தன்னை மீறிய பொது நலம்தான்.

அப்படிப் பிரார்த்தனைக்குச் செயல்வடிவம் கொடுத்த வர்கள்—அப்படி சமுதாயத்தின்பால் அக்கறை கொண்ட வர்கள்தான் மகாத்மா காந்தியும், அன்னை தெரசாவும். வாழ்க்கை என்பது தேவனாகும் முயற்சிதான் என்றால் அவர்கள் அந்தத் தேவனாகும் முயற்சியை எப்படிச் செயல் படுத்துகிறார்கள் என்பதைக் கவனியுங்கள். மக்கள் பணி செய்கிறார்கள். அதுதான் மகேசன் பணி.

இது பெரிய விஷயம்.

எல்லோருமே இப்படிப் பெரிய விஷயங்களில்தான் ஈடுபடவேண்டுமென்பதில்லை.

கோவை நண்பர்கள் சிலர் இதே தத்துவத்தில் தர்ம சக்கரம் என்றதோர் அமைப்பை உருவாக்கி இருக்கிறார்கள்.

என்ன லட்சியம்?

மிகவும் எளிதான லட்சியங்கள்!

சுய வளர்ச்சி

சுய பொருளாதார மேம்பாடு

சமுதாய ஈடுபாடு

என்ற மூன்றே குறிக்கோளுடன், மனிதவாழ்வின் மிக முக்கியமான பிரச்சினைகளைத் தொட்டிருக்கிறார்கள்.

தனிப்பட்ட மனிதர்களாய் நேற்றுவரை இருந்தவர்களை எது பிணைத்தது?

சில எண்ணங்கள், சில கருத்துக்கள், சில லட்சியங்கள்.

தாம் உயர்வதிலும், பிறர் உயர்வதிலும், புதுச் சமுதாயம் மலர்வதிலும் அவர்களுக்குள்ள ஈடுபாடு.

இங்கே ஒத்த உள்ளங்கள் ஒன்றுசேருகின்றன. புதிய உறவால் இணைகின்றன. இணைப்பில்தான் எத்தனை வலிமை! எவ்வளவு ஆர்வம்! தன்னம்பிக்கை!

ஒத்த உள்ளங்கள் ஏன் ஒன்றுசேருகின்றன?

லட்சியத்தின்பால் கொண்ட உறவு.

இது ஒரு புதுவகை உறவு; நான். என் வீடு, என் குடும்பம், என் சாதி, எனது ஊர் என்பதை எல்லாம் தாண்டிய உறவு.

நாட்டு விடுதலை என்ற உயர் லட்சியத்தை ஒட்டி மகாத்மா காந்தியை நம்பி தொண்டர்களும் மக்களும் செயல்பட்டார்கள். இது தங்கள் சுயநலத்திற்காக அல்ல. இதன் விளைவாக ரத்தம் சிந்தாது—உலகிலே முதன் முறையாக, ஒரு சாத்வீகப் புரட்சியும் அதனால் அரசாங்க மாற்றமும் நிகழ்ந்தது, நம் நாட்டில்.

அதேபோல் "உழைப்புக்கேற்ற கூலி. திறமைக்கேற்ற வேலை" என்ற சமதர்மக் கருத்தை முன்வைத்து லெனினும் அவரது நண்பர்களும் ஒரு புரட்சியை ஏற்படுத்தினார்கள். இதன் விளைவாக, ராஜபரம்பரை ஆளும் பரம்பரை என்ற

பழங்கால முறைகளெல்லாம் மாறி ஒரு புதிய சமுதாயம் உருவாகியது.

ஒத்த உள்ளம் உடையோர் கொண்ட உறவு—சமுதாய நலனுக்காக அவர்கள் தங்களை அர்ப்பணித்துக் கொண்ட நோக்கம்—இவை இரண்டும் உலகையே மாற்றி அமைத்தது. அவர்கள் சில திட்டங்களை, சில செயல்களை, சில தியாகங் களை மேற்கொண்டார்கள். இதன் விளைவாக, அவர்கள் புதிய பாதை கண்டார்கள். பழமையையும் பொய்மையையும் அவர்கள் தூக்கி எறிந்தார்கள்.

தமிழ் சமுதாயத்தில் ஆட்சிபீடத்தில் இன்று நிலவும் உறவுகள், நெறி பிறழ்ந்து நிற்கின்றன.

ஒருவர் செய்யும் கொள்ளையை மற்றவர் அங்கீகரிக்கும் நிலை; அதிகாரத்தை உபயோகித்து நியாயங்களை ஒடுக்கு தல்; எல்லாவற்றிற்கும் மேலாக, வறுமைக் கோட்டிற்கு மிக மிகக் கீழே இருக்கும் நாற்பது சதவிகித ஏழை மக்களுக்குப் போய்ச் சேரவேண்டிய நன்மைகளைத் தாங்களே பகிர்ந்து கொள்ளுதல். ஏழையை ஏழையாகவும், அறியாதவனாகவும் சுகாதாரமற்றவனாகவும், வைத்திருக்கும் கொடுமை.

ஏழையை வஞ்சிப்பதுதான் கொடுமையிலும் கொடுமை. சுதந்திரம் வந்து 39 ஆண்டுகள் ஆகியும் கிராமத்து ஏழை எந்த விதத்திலும் முன்னேறிவிடவில்லை என்றால் என்ன பொருள்? அவனுக்கு உரிய இடத்தை சமூகப் பொருளா தாரத்தில் அவன் பெறவில்லை என்றால் என்ன அர்த்தம்?

சமுதாய ஈடுபாடு கொண்டவர்கள் எல்லாம் கண்விழிக்க வேண்டிய நேரம் இது. நீதிக்காகவும், நேர்மைக்காகவும், உரிமைக்காகவும் எழுந்து நின்று போராடவேண்டிய நேரம் இது. வாழ்வில்—சமுதாயத்தில்—தர்மநெறிகள் தாழ்ந்து போனால் அந்தச் சமுதாயம் எங்கே போகும்?

கோவையிலே பல நல்லோர் குரல் ஒலிக்கிறது; வெளிச்சம் தெரிகிறது. வெளிச்சம் பரவட்டும்

ஒத்த உள்ளம் உடையோர் எல்லாம், ஒரு புது உறவை உருவாக்கி, தங்கள் சமுதாய ஈடுபாட்டைக் காட்ட வேண்டிய நேரம் இது. சமுதாயத்துடன் நமக்கோர் உறவிருக்கிறது. வாழ்வுக்கு—தார்மீக நெறிகளோடு ஒரு உறவிருக்கிறது. நலிந்தோர்பால் வலிவு பெற்றோருக்கு ஒரு கடமை இருக்கிறது. இந்த விழிப்புணர்ச்சியைப் பரப்பு வோம். ஒத்த உள்ளம் கொண்டோர் எல்லாம் லட்சியத் தின்பால் கொண்ட உறவால், ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்க முன்வருவோம்.

ஒரு புதிய நல்ல சமுதாயத்தை உருவாக்க முடியுமா என்று பலர் கேட்கிறார்கள். ஒரு சிலர், "முடியாது!" என்று வாதிடுகிறார்கள். அவர்கள் ஒன்று பயந்தவர்களாக இருக்க வேண்டும், அல்லது சுகவாசிகளாக இருக்க வேண்டும். பொது வாழ்க்கைக்காகச் சில தியாகங்களை மேற்கொள்ள விரும்பாதவர்கள் அவர்கள்.

பேசுகின்ற கூட்டங்களிலெல்லாம், "மாற்ற வேண்டும்; மாற்றுவோம்?" என்ற வீர உணர்வுகளைத்தான் கேட்கி றேன். ஒளி வீசும் முகங்களைத்தான் காண்கிறேன்.

அவர்களுக்கெல்லாம் நான் மீண்டும் மீண்டும் சொல்ல விரும்பும் தாரக மந்திரம்.

நம்பு, தம்பீ!
நம்மால் முடியும்!
நம்மால் இந்தச் சமுதாயத்தை மாற்றமுடியும்!
நம்புங்கள், தங்கைகளே!
நம்மால் முடியும்!

**எம். எஸ். உதயமூர்த்தி**

# வாழ்க்கைக் குறிப்பு

எம். எஸ். உதயமூர்த்தி விளநகர் என்ற கிராமத்தில் மயிலாடுதுறை தாலுக்காவில், தஞ்சை மாவட்டத்தில் பிறந்தவர். மயிலாடுதுறை உயர்நிலைப் பள்ளியில் படித்த பின் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இளநிலை பட்டப்படிப்பும் முதுநிலை பட்டப்படிப்பும் பெற்றார். சென்னை பல்கலைக் கழகத்தில் தனது பாடமான வேதியியலில் மற்றோர் முதுநிலைப் பட்டம் பெற்றபின் மேற்படிப்புக்கு அமெரிக்கா சென்றார்.

அமெரிக்கா செல்லுமுன் குடந்தை அரசினர் கல்லூரியிலும், கிண்டி பொறியியல் கல்லூரியிலும் (இன்றைய அண்ணா பல்கலைக் கழகத்திலும்) வேதியியல் (Chemistry) உதவிப் பேராசிரியராகப் பணியாற்றினார்.

அமெரிக்காவில் விஸ்கான்சின் பல்கலைக்கழகத்தில் மருத்துவ ரசாயனத்தில் டாக்டர் பட்டம் பெற்று ஒரு பத்தாண்டுகள் விஸ்கான்சிலுள்ள மவுண்ட் செனாரியோ கல்லூரியிலும், மின்னசோட்டா, ஐடகோ பல்கலைக் கழகங்களிலும் பேராசிரியராகப் பணியாற்றினார்.

பின் ஆசிரியத்துறையை விட்டு விலகி விஸ்கான்சினில் உணவு தயாரிக்கும் நிறுவனம் ஒன்றில் அதன் தலைமை நிர்வாகியாக நான்காண்டுகள் பணியாற்றினார். 1982இல் (Barclay Chemicals) பார்க்கிளே கெமிகல்ஸ் என்ற தனது சொந்த ரசாயனப் பொருள்களை உற்பத்தி செய்யும் நிறுவனத்தைத் துவங்கினார். அந் நிறுவனத்தைத் தனது குமாரரிடம் ஒப்படைத்துவிட்டு 1987இல் நிரந்தரமாக இந்தியா வந்தார். இன்று சென்னையில் வசிக்கிறார் அவர்.

சிறந்த ஆசிரியர் என்ற விருதும். 'புல் பிரைட்' அறிஞர் (Full Bright Scholar) என்ற கௌரவமும், அமெரிக்காவில்

தொழில் துறையில் உள்ளவர்களில் 'யார் யார்' என்ற நூலில் அவரது பெயர் இடம் பெற்ற பெருமையும் அவருக்குண்டு.

தன் கட்டுரைகளின்மூலம், பேச்சின்மூலம், செயல்களின் மூலம் ஆக்கப்பணிகளைச் செய்து வருகிறார்; மக்களைத் தட்டி எழுப்பிவருகிறார்.

தனது அறிவுக்கும் திறமைக்கும் ஏற்ற ஒரு புதிய சமுதாயத்தைத் தமிழகம் பெறவேண்டும் என்று விரும்பு கிறார் எம். எஸ். உதயமூர்த்தி.

எம். எஸ். உதயமூர்த்தி ஒரு எழுத்தாளர்.

மனவியலைப்பற்றித் தொடர்ந்து, கடந்த பதினைந்து ஆண்டுகளாகத் தமிழ்ப் பத்திரிகைகளில் கட்டுரைகள் எழுதி வந்தவர். எழுதி வருபவர்—டாக்டர் எம். எஸ். உதய மூர்த்தி. மனோதத்துவங்களை வாழ்க்கைக்கு எப்படிப் பயன்படுத்துவது என்பதைச் சுமார் 12 நூல்களில் வடித்துத் தந்திருக்கிறார் அவர்.

எம். எஸ். உதயமூர்த்தியின் உந்துதல்கள் கன்னியா குமரியிலிருந்து கிருஷ்ணகிரிவரை, வேதாரண்யத்திலிருந்து வால்பாறை வரை இளைஞர்களை, பெண்களை—படித்த மக்களை—ஒரு உத்வேகம் பெறச் செய்திருக்கிறது. சமீபத் தில் டைரக்டர் பாலசந்தர் 'உன்னால் முடியும் தம்பீ' என்ற தலைப்பில் ஒரு திரைப்படத்தை வெளியிட்டிருக்கிறார். அப் படத்தின் கதாநாயகன் பெயர் உதயமூர்த்தி. இப்படி பாலசந்தரிலிருந்து பள்ளி இளைஞர்கள் வரை—அவரது எழுத்துக்கள் ஒரு ப்ாதிப்பை—ஒரு உத்வேக உணர்வை—ஒரு நம்பிக்கையை—உருவாக்கி இருக்கிறது; ஒரு அமைதியான மாற்றம் நாட்டில் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது.

எழுத்து என்னவெல்லாம் செய்யும்?

பொறுத்திருந்து பார்ப்போம்!

## டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி

### எழுதிய இதர நூல்கள்

வாழ்க்கையை அமைக்கும் எண்ணங்கள்

ஆத்ம தரிசனம்

நெஞ்சமே அஞ்சாதே நீ!

தட்டுங்கள் திறக்கப்படும்

மனம் பிரார்த்தனை மந்திரம்

தலைவன் ஒரு சிந்தனை

எண்ணங்கள்

உயர் மனிதனை உருவாக்கும் குணங்கள்

பிரச்சினைகளுக்கு முடிவு காண்பது எப்படி?

நாடு எங்கே செல்கிறது?

தன்னம்பிக்கையும் உயர் தர்ம நெறிகளும்

சிந்தனை தொழில் செல்வம்

நம்மால் முடியும் தம்பி-நம்பு!

நீதான் தம்பி, முதலமைச்சர்!

வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு,
தி. நகர், சென்னை-600 017.

# 1

**ஜோ**சு என்ற புத்த ஞானி, மடத்தின் வரவேற் பறைக்குள் நுழைந்தார். தான் சத்தித்த முதல் துறவியைப் பார்த்து, "உங்களை இதற்கு முன் சந்தித்திருக்கிறேனா?" என்று கேட்டார். துறவி, "இல்லை" என்று பதிலிறுக்கவே, "அப்படியானால் என்னுடன் தேநீர் அருந்துங்கள். வாருங்கள்!" என்றார் ஞானி.

அடுத்து, உள்ளே நுழைந்த மற்றோர் துறவியைக் கண்ட ஜோசு, "உங்களை இதற்குமுன் சந்தித்திருக் கிறேனா?" என்ற அதே கேள்வியை எழுப்பினார். "ஆம் சுவாமி! நான் உங்களை முன்பே சந்தித்திருக்கிறேன்!" என்றார் துறவி. "அப்படியானால் மிகவும் மகிழ்ச்சி! வாருங்கள், என்னுடன் தேநீர் அருந்துங்கள்!" என்றார் ஞானி.

இந்த இரண்டு சம்பவங்களையும் கவனித்துக் கொண்டிருந்த புத்த மடத்து நிர்வாகியான துறவி, ஞானி ஜோசுவைப் பார்த்து, "சுவாமி! இரண்டு துறவி களைச் சந்தித்தீர்கள். அவர்களது இரண்டுவிதமான பதிலுக்கும் நீங்கள் ஒரேவிதமாகப் பதில் கூறி அவர் களைத் தேநீர் அருந்த அழைத்தீர்கள்! உங்கள் செயல் எனக்குப் புரியவில்லையே?" என்று தயங்கியவண்ணம் கேட்டார்.

ஞானி ஜோசு அவரை நோக்கிப் புன்னகைத்தார் : "நீங்கள் இன்னும் இங்கேதான் இருக்கிறீர்களா?"

"ஆம் சுவாமி!"

''அப்படியானால் வாருங்கள். என்னுடன் கொஞ்சம் தேநீர் அருந்துங்கள்!'' என்றார் ஞானி.

இப்படி ஒரு கதை 'சென்' (Zen) புத்த ஞானி ஜோசுவைப்பற்றிக் கூறப்படுகிறது. 'சென்' (தியானம்) புத்தக் கதைகள் படிப்பதற்கு விடுகதைகள் போலிருக்கும். சிந்திப்பதற்கு, தெளிவு பெறுவதற்கு நிறைய உள்ளர்த்தம்கொண்ட கதைகள் இவை.

ஞானி ஜோசு, தெரிந்தவரையும் தெரியாதவரையும் அன்புடன் நடத்துகிறார்; இன்னும் ஒரு படி மேலே சென்று தேநீர் கொடுத்து உபசரிக்கிறார். தனது மரியாதையையும் கனிவையும் செயல்மூலம் வெளிப்படுத்துகிறார். புத்தமடத்து நிர்வாகியைப் பார்த்து, 'இங்குதான் இருக்கிறீர்களா?' என்று கேட்கிறார்.

என்ன சொல்கிறார் ஞானி?

'இங்குதான் இருக்கிறாயா? நிகழ்காலத்தில்தான் வாழ்கிறாயா? சூழ்ந்திருக்கும் மனித இனம் உன் கண்ணுக்குத் தெரிகிறதா? அவர்களுடன் அன்பாக, கனிவாகப் பழகக் கற்றுக்கொண்டாயா? அவர்களுடைய மகிழ்ச்சியில் நீ மகிழ்ச்சி காண்கிறாயா?' என்று கேட்காமல் கேட்கிறாரா?

அன்புள்ள வாசகர்களே!

நீங்கள் இன்னமும் இங்குதான் இருக்கிறீர்களா? அப்படியானால் வாருங்கள், கொஞ்சம் தேநீர் அருந்துங்கள். பேசுவோம்...

ஒரு மனிதன் தன்னைத்தானே எப்படி மதிக்கிறான் (உள்ளுறவு), பிறருடன் எப்படிப் பழகுகிறான், நடந்துகொள்கிறான் (உலக உறவு) என்பதை வைத்துத்

தான் அவனை ஊரும் உலகமும் எடை போடுகிறது. கொண்டாடுகிறது.

அமெரிக்காவில் நீங்கள் ஒரு வேலைக்கு விண்ணப் பித்தீர்களானால், இந்தியாபோல் யாரும் அங்கு பாட சம்பந்தமான கேள்விகளைக் கேட்டு உங்கள் அறிவை மீண்டும் சோதிப்பதில்லை. நிறுவனத்திலுள்ள முக்கிய மானவர்களைப் பேட்டி காணச் செய்கிறார்கள். இதன் மூலம் பிறருடன் அவரால் எளிதாகப் பழக முடியுமா, அங்கிருக்கும் எல்லோருடனும் அவரால் ஒத்துப்போக முடியுமா என்று பார்க்கிறார்கள். பட்டம், தகுதிக்குப் பின் பழகும் தன்மைதான் முக்கிய இடம் வகிக்கிறது.

''என்னைப் பாராட்டும் ஒருவனை, உலகின் இரண்டாவது பெரிய மனிதனாக நான் நினைக்கிறேன்!' என்றோர் வாசகம் உண்டு. இனிமையாகப் பழகும் ஒருவனிடம் எல்லோரும் இனிமையாகப் பழகத் துவங்கு கிறார்கள். ஹாஸ்யமாகப் பேசும் ஒரு மனிதனுடன் இருப்பதை எல்லோரும் விரும்பி வரவேற்கிறார்கள். பிறருக்கு உதவும் ஒரு மனிதனுக்கு உலகமே உதவ முன் வருகிறது.

நாம் பிறருடன் பேசும்போது, பழகும்போது ஓர் உறவு நிச்சயிக்கப்படுகிறது. நமது முகபாவத்தின் மூலமும், சொல்லின் மென்மையிலும் கனிவிலும் அந்த உறவு பின்னப்படுகிறது. அந்த உறவின் நுனியிலிருந்து தான் மேலே பல புதிய உறவுகள்—கொடிகள் படருகின்றன. பசுமையையும் குளுமையையும் மணத்தை யும் அந்த உறவுகள் பரப்புகின்றன, கொண்டு தருகின்றன.

உறவு இனிமையான உணர்வுகளை எழுப்பும்போது அதன் இனிய இசையில் நம்மை மறக்கிறோம். அது

நம்மை மகிழ்விக்கிறது. உறவுகளின் மாறுபாட்டில் அவல ஓசையும் இடியும் மின்னலும் பயமும் சந்தேகமும் எழுகின்றன.

உலகம் போகிற வேகத்தில் அதற்கு ஈடுகொடுக்க நாம் அன்றாட வேலைகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து அடிப்படைகளை மறந்துவிட்டோமோ என்று நாம் யோசிப்பதுண்டு.

ஜீவனின் வாழும் முனைப்பில் வாழ்வு துவங்கலாம். ஆனால், இத்தகைய ஜீவன்களின் ஒருங்கிணைந்த இயக்கத்தில்தான் இப் பிரபஞ்சம் செயல்படுகிறது. இசைப்பட இசைந்து வாழும்போதுதான் தனி மனிதனுடைய—ஒரு சமுதாயத்தினுடைய—ஆக்க சக்தி தங்குதடையின்றிப் பொங்கிப் பிரவகிக்க முடிகிறது. அதை நாம் எங்கே பின்னப்படுத்தினாலும் அந்தச் சமநிலை தவறத்தான் செய்கிறது. சேர்ந்து வாழ்வதில்தான் சிறப்பு இருக்கிறது.

அறிவு, திறமை, கற்பனை, துணிச்சல், முடிவெடுக்கும் திறன், வியூகம் என்ற இவற்றுடன் வாழ்வின் வெற்றிக்குத் தேவையான மிக முக்கியமான குணம் 'பழகும் தன்மை' தான்.

அதிகாரத்தின் முன்னிலையிலோ, செல்வாக்கின் முன்னிலையிலோ, பணத்தின் பின்பலத்திலோ, ஒரு தலைவனின் செல்வாக்கு நிழலிலோ நீங்கள் ஒரு பதவியைப் பெறக்கூடும். ஆனால் பிறருடன் உங்களால் ஒத்துப்போக முடியவில்லை என்றால், பிறருடன் சுமுகமாக அரவணைத்துப் பழக முடியவில்லை என்றால் உங்கள் பதவி நிலைக்காது. அரசியல் உலகில் இத்தகைய ஆர்ப்பாட்டக்காரர்களின் பதவி ஆட்டம் காண்பதையும், பிறகு அவர்கள் பிறர் காலில் விழுவதையும் அன்றாடக் காட்சியாகக் காண்கிறோம்.

மொரார்ஜி தேசாய்க்கு எல்லோரையும் இழுத்து அரவணைத்துக்கொண்டுபோக முடியாத குறை உண்டு. இதன் காரணமாக, பிரதமர் பதவி என்ற 'வாராது வந்த ஓர் அரிய சந்தர்ப்ப'த்தை அவரால் நிலைக்க வைத்துக்கொள்ள இயலவில்லை. மனித உறவுகளில் அவர் வல்லவர் இல்லை. 'அவர் கொள்கைகளைத் தியாகம் செய்ய விரும்பவில்லை' என்று சிலர் சப்பைக் கட்டு கட்டக்கூடும். மகாத்மாகாந்தியும் ஒரு நாள்கூடக் கொள்கைகளைத் தியாகம் செய்தவரில்லைதான். எனினும் ஒரு மாபெரும் இயக்கத்தையே இழுத்துக் கொண்டுபோகும் மனிதப் பண்புகள்—உறவுகள் அவரிடம் குடிகொண்டிருந்தன.

மனித உணர்வுகளை மதித்து மனித வாழ்வை மேம்படுத்த நாம் முயலவேண்டும்.

ஒரு சமயம், அமெரிக்காவில் ஐந்தாம் வகுப்பு குழந்தைகளுக்கு இந்தியாவைப் பற்றிச் சொல்லுமாறு என்னைக் கூப்பிட்டிருந்தார்கள். நான் பேசப் புகுமுன் அந்த ஆசிரியர் என்னிடம் சொன்னது இன்னமும் என் நினைவில் நிற்கிறது.

"சிறுவர்கள் என்று எண்ணிப் பேசாதீர்கள். சமமானவர்கள் வளர்ந்தவர்கள் என்று எண்ணிப் பேசுங்கள்!" என்றார். அவர் சொன்ன வார்த்தைகள் ஒருகணம் என்னைத் தூக்கிவாரிப் போட்டது. அடுத்த கணம் என்னைப் பெரிதும் சிந்திக்க வைத்தது. நாம் குழந்தை வளர்க்கும் முறைகளைப் பல்முறை எண்ணி எண்ணிப் பார்த்தேன்.

இவ்வுலகின் எல்லாவகைப் பிரச்னைகளையும் தீர ஆராய்ந்து பார்த்தோமானால் உலகில் இரண்டு வகையான பிரச்னைகள் இருப்பது புரிய வரும்.

ஒன்று: மனித சக்திக்கு அப்பாற்பட்ட இடி, மின்னல், பூகம்பம், எரிமலை, மழை, வெள்ளம், புயல், தீ —என்று இயற்கை ஏற்படுத்தும் பிரச்னைகள்.

இரண்டாவது: குடும்பத்திலிருந்து, தொழில் செய்யும் அலுவலகத்திலிருந்து, நாட்டு அரசியலிலிருந்து, சர்வதேச உறவுகள்வரை நிலவும் பிரச்னைகள். இவையெல்லாம்—அனைத்தும் மனிதர்கள் ஏற்படுத்திய பிரச்னைகள்; மனித மனங்கள் விளைவித்த பிரச்னைகள்; கருத்து வேறுபாடுகள் உண்டாக்கிய பிரச்னைகள்.

இயற்கை ஏற்படுத்திய பிரச்னைகளையே சமாளிக்கும் மனிதன், தான் தோற்றுவித்த பிரச்னைகளையா கண்டு மாய்ந்துவிடப்போகிறான்? இல்லை. ‘இவை மனித உணர்வுத் தேவைகளிலிருந்து எழுந்தவை’ என்ற அடிப்படையை நாம் புரிந்துகொள்ளும்போது, நம்மால் அதைச் சமாளித்துவிட முடியும்.

## 2

**மனைவி என்ற பெயரில் சுகம் தருவதற்காக ஒரு பெண்ணை, சமையலுக்கான ஒரு சமையற்காரியை, வீட்டு நிர்வாகத்துக்கான ஒரு நபரை நாம் திருமண விழா மூலம் பெறுவதில்லை.**

உறவுகள், இனிய உறவுகள்...! நமக்கும் நம் மனச்சாட்சிக்குமுள்ள உறவுகள். நாம் நம்மை மதிக்கிறோமா? நம்மை நமக்கே பிடித்திருக்கிறதா? நாம் செய்துவரும் காரியங்கள், வாழ்ந்து வரும் வாழ்க்கை நமக்கே பெருமை தருகிறதா? நாம் நம்முடனேயே ஓர் இனிய உறவை ஏற்படுத்தி ஒரு நிறைவுடன் வாழ்கிறோமா?—நாம் கேட்டுப்பார்க்க வேண்டிய கேள்விகள்.

நம்மைச் சுற்றி நம் குடும்பம் இருக்கிறது—பெற்றோர், மனைவி, கணவன், குழந்தைகள், உற்றார், உறவினர் என உறவுகள் என்ற அழுத்தமான பாசப் பிணைப்பில் அங்கே வாழ்கிறோம். அந்த உறவுகளின் பந்தத்தை நாம் மதிக்கிறோமா? சீராட்டுகிறோமா? வளர்க்கிறோமா? நம்மைச் சுற்றிலும் எத்தனை மனித உள்ளங்கள், உறவின் அலட்சியத்தால், முறிவால், பிரிவால் மாறுபடுகின்றன, சீர்கேடடைகின்றன என்பதை நாம் எண்ணிப்பார்க்கவேண்டும்.

சமுதாயத்தில்...நாம் வேலை பார்க்குமிடத்தில் நமக்குள்ள உறவுகளை ஒரு கணம் எண்ணிப்பாருங்கள். மனிதர்களது திறமைகளால், துணிவினால், கற்பனையினால்தான் எந்த ஒரு நிறுவனமும் அல்லது நாடும் முன்னேறுகிறது. அப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையை, வாய்ப்பை ஒரு தொழில் நிர்வாகி—ஓர் அரசியல் தலைவன் நாட்டில் உருவாக்குகிறான். எப்படி? மனிதர்களைப் பாராட்டுவதன்மூலம், லட்சியத்தைக் காட்டி மனித உள்ளங்களை உத்வேகப்படுத்துவதன்மூலம் தவறு நேரும்போது தான் பொறுப்பேற்றுக்கொண்டு தட்டிக் கொடுப்பதன்மூலம்.

உறவுகள்—அந்த உறவை எண்ணித் தலைவனுக்காக உயிரையே தர, தொழில் நிர்வாகிகளுக்காக இரவு பகலாக உழைக்கத் தொண்டர்கள் முன்வருகிறார்கள். அந்தத் திறமைசாலிகளைச் சரியானபடி பயன்படுத்திக் கொள்ளும்போது லட்சியங்கள் சாதனைகளாக உருவெடுக்கின்றன.

மனிதன் தன் மூளையைக்கொண்டு பல புதிய உத்திகளைக் கண்டுபிடிக்கிறான் என்றாலும், வெறும் மனித

மூளையை மட்டும் நாம் வாங்க முடிவதில்லை. அத்துடன் மனிதனும் வருகிறான். ஒரு தொழிலாளியின் உழைப்பை மட்டும் நாம் வாங்குவதில்லை; அத்துடன் தொழிலாளி என்ற விசுவாசியும்கூட வருகிறான்.

மனைவி என்ற பெயரில் சுகம் தருவதற்காக ஒரு பெண்ணை, சமையலுக்கான ஒரு சமையற்காரியை, வீட்டு நிர்வாகத்துக்கான ஒரு நபரை நாம் திருமணவிழா மூலம் பெறுவதில்லை. இனிமை, பொறுமை, நியாய உணர்வுகள் என்பதெல்லாம் குடிகொண்ட ஓர் ஆத்ம தொடர்பையும் நாம் பெறுகிறோம்.

நாம் உணர்வுகளால் ஆளப்படுபவர்கள். அந்த உணர்வுகளை உண்டுபண்ணும் ஒரு நல்ல சொல், ஒரு நல்ல செயல், ஒரு நல்லெண்ணக் குறிப்பு நம்மைச் சூழ் நிலையுடன் தொடர்புபடுத்துகிறது; நம்மைச் சுற்றி யிருக்கும் சமுதாயத்தை ஆட்டிப் படைக்கிறது.

நமக்கும் சூழ்நிலைக்கும் உள்ள பாலம்தான் உறவு கள். அதேபோல், நமக்கும் நம்முள்ளே இருக்கும் மனச் சாட்சிக்கும் ஒரு பாலம் இருக்கிறது. நமது மனச்சாட்சி சதா குரல் கொடுத்துக்கொண்டிருக்கிறது. அது என்ன குரல்? 'தம்பீ! நீ கெட்டிக்காரன். பெண்ணே! நீ வல்லமை படைத்தவள். மகளே! நீ சமர்த்து' என்று ஜீவ ராகம் பாடுகிறதா? இல்லை, 'உன் விஷயம் எப்போதுமே இப்படித்தான். துப்புக்கெட்ட மனிதன். உனக்கு ஒரு பெண்டாட்டி, பிள்ளைகுட்டி கேடா? வயதாயிற்றே யொழிய அதற்கேற்ப அறிவுண்டா உன்னிடம்![4] என்று நம்மை விரட்டுகிறதா?

இது நம்மை நாமே மதிக்கும் உள்ளுறவு. இது இருந்தால்தான் நமக்கு அமைதி கிடைக்கும். இங்கு

போராட்டம் ஏற்படாமலிருக்கும்போதுதான். நமது ஆக்க சக்தி நம் வாழ்வின் லட்சியங்களைத் தொட முடியும். தனக்குள்ளே போராட்டத்தை ஏற்படுத்திக் கொள்ளும் ஒருவன் தன் சக்தி சிதறிப் போவதைக் காண்கிறான். நிம்மதியின்றித் தவிக்கிறான். சில சமயம் இவர்கள் தங்களைத் தாங்களே சமாளிக்க முடியாதவர் களாகி வாழ்வை முடித்துக்கொள்கிறார்கள், தற் கொலை செய்துகொள்கிறார்கள்.

நம்மிடம் 'உள்ளுறவு' வலிவாக இருக்கவேண்டும்; அது நல்ல நட்பாக இருக்கவேண்டும்; நம்மை, தட்டிக் கொடுத்து உயர்த்திவிடும் தன்மையாக அங்கிருந்து நாதம் புறப்படவேண்டும்.

இரண்டாவது உறவுதான்—குடும்ப, சமுதாய உறவு.

இந்த உறவில் முக்கிய பங்கு வகிப்பது கணவன் மனைவி உறவு. இது ஒரு கவிதையாக, காவியமாகப் பயில் தொறுல் நூல் நயம்போல் இருக்கவேண்டும். நாம் இங்குதான் குழந்தையாக, ஆலோசகனாக, நண்பனாக, பரோபகாரியாகப் பலவகை ரூபங்களை எடுக்கிறோம். ஊடல், தாபம், சிறு சச்சரவு என்பவை இல்லாத தாம்பத்திய உறவுகள் இல்லை. எனினும் மொத்த உறவு, அன்பு, தியாகம், மன்னிக்கும் மனோபாவம், விட்டுக் கொடுக்கும் பெருந்தன்மை நிறைந்ததாக இருக்க வேண்டும்—இருபக்க சமநிறையில்.

குடும்ப—சமுதாய உறவுகளுக்கடுத்தபடியாக ஓர் உறவிருக்கிறது. 'இங்கு நான் ஏன் வந்தேன்? இவ்வுலகிற்கும் இப் பிரபஞ்சத்துக்கும் எனக்குமுள்ள தொடர்பு—உறவு யாது? அது விஷயமாக நான் என்ன செய்திருக்கிறேன்? அதை எப்படி நான் வலுப்படுத்த

முடியும்?' என்பன போன்ற எண்ணமாகும் அது. இந்த உறவுதான் வாழ்வை அர்த்தமுள்ளதாக ஆக்குகிறது. நம் லட்சியங்களுக்கு ஒரு தெளிவு கொடுக்கிறது. நம் வாழ்வுக்கு ஓர் அர்த்தத்தைக் கொடுக்கிறது. உயர்ந்த குணங்கள் என்ற மந்திரக்கோலால் நம் வாழ்வைத் தொடுகிறது.

ஒரு 'சென்' புத்த ஞானி, ஒரு சிறு கழியைக் கையி லெடுக்கிறார். 'இதைக் கழி என்று சொன்னால், இதி லுள்ள நிரந்தரமான ஜீவனை அவமதிப்பதாகாதா? இது கழி இல்லை என்று சொன்னால், இதன் இன்றைய உலக நிலையை மறுப்பதாகாதா?' என்று வினாக்களை எழுப்புகிறார்.

அதைத்தான் நாம் உணரவேண்டும். ஒரு கழியின் இரண்டு வகைத் தன்மைகளையும் நாம் உணர்ந்து கொள்ளவேண்டும். அதுபோல, பிரபஞ்ச சக்தியின் ஒரு பகுதி நாம் என்பதையும் உணரவேண்டும். அதே சமயம் இவ் வுலகில் நம் குடும்பத்துடனும் பிற மக்களுட னும் வாழ நமக்கு ஒரு வாய்ப்புக் கொடுக்கப்பட்டிருக் கிறது என்பதையும் உணர்ந்துகொள்ளவேண்டும்.

நாம் நம் எண்ணங்களால், சொற்களால், செயல் களால், நம்மைச் சூழ்ந்திருக்கும் மனித சமுதாயத்துடன் தொடர்புகொண்டிருக்கிறோம். நம் சிந்தனையும் சொல்லும் செயலும் மற்றவற்றைப் பாதிக்கின்றன.

மனித உறவுகள், மனித உணர்வுகளில் மிதப்பவை; உருவாகுபவை. பிறரது உணர்வுகளைப் பாதிக்கும் சொல்லென்ன, செயலென்ன என்று நாம் தெரிந்து கொண்டால் இந்த உலகமே நமக்கு உதவ முன் வராதா?

ஆம்; நிச்சயமாக!

# 3

மாயவரம் முனிசிபல் உயர்நிலைப் பள்ளியில் நாயுடு என்பவர் பியூனாக வேலை பார்த்தார். மெலிந்த உடல்; குள்ள மான உருவம். தலையிலே முண்டாசிருக்கும். முரட்டுத் துணி யிலான அரைக் கை சட்டைமீது குறுக்கும் நெடுக்குமாக அரசாங்கப் பட்டயம் தொங்கும்.

**உ**றவுகள் சுமுகமான நிலையில் இருக்கும்போது எல்லோரும் உதவ வருகிறார்கள். சந்தோஷத்தை, நிறைவை, நன்றியை, அன்பைத் தெரிவித்துக்கொள் கிறார்கள். ஒரு சொல்லால் பிறரை உற்சாகப்படுத்தும் ஒருவன், தன் வாழ்நாள் பூராவும் நன்றியுள்ள ஒரு மனிதனை மறுபுறத்தில் உருவாக்குகிறான்.

''நீங்கள் என்மீது வைத்த நம்பிக்கையை எண்ணிப் புல்லரித்துப்போனேன். அதன் விளைவாக, எனக்கே என்மீது நம்பிக்கை பிறந்தது. உங்களுக்காக நான் உயரவேண்டும் என்று எண்ணி உழைத்தேன்'' என்கிறார் முன்னுக்கு வரும் ஓர் இளைஞர். ஒரு சொல், ஒரு நம்பிக்கை விளைவித்த அற்புதத்தைக் கவனியுங்கள். அந்த இளைஞரின் மனோநிலையில் உங்களை வைத்துக் கொண்டு உங்களுக்கேற்பட்ட அனுபவங்களைச் சிந்தி யுங்கள்.

''உனக்காக நான் என் உயிரையே கொடுப்பேன்'' என்கிறான் அந்த இளைஞன், அந்த இளம் பெண்ணைப் பார்த்து. இதனால் அத்தனை நாள் வளர்த்த பெற்றோர், உற்றார், உறவினர்; சுகம், வீடு, உறவு என்று எல்லாவற் றையும் பின்னே தள்ளிவிட்டு அவனுடன் வாழ்க்கைப் பயணத்தைத் தொடர்கிறாள் ஒரு பெண்—காதலுறவு.

குரு தூங்குகிறார் என்று வண்டு கடித்துத் தொடையில் ரத்தம் சிந்துவதையும் பொறுத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறான் ஓர் இளைஞன். குரு அவன் காலைத் தலையணையாய் வைத்து உறங்கு கிறார்—குரு சிஷ்ய உறவு.

"அரசே! ஆணையிடுங்கள். உயிரைப் பணயம் வைத்துப் புறப்படுவோம் போருக்கு!" என்று ஆர்ப்பரிக் கிறார்கள் போர் வீரர்கள்—தாய்நாட்டின்மீது உறவு—அரசன்மீது பரிவு.

உறவுகள் இல்லாத உலகம் இல்லை. சமீபத்தில் ஒரு புத்தகத்தில், "நீங்கள் எந்த ஊரில் வசிக்கிறீர்களோ அந்த ஊரில் விளையும் காய்கறிகளை—உணவுப் பொருட்களைச் சாப்பிடுங்கள். அப்போது உங்கள் உடல் அங்கிருக்கும் வெப்ப தட்பத்துக்கேற்ப இயங்கும்" என்று எழுதப்பட்டிருக்கிறது. இதன் விஞ்ஞான உண்மை நமக்குத் தெரியாது. ஆனால், நாம் வாழும் சூழ்நிலை யுடன் உறவேற்படுத்திக்கொள்ளும் ஒரு மனப்பான்மை இருக்கிறதே, அது பெரிதும் ரசிக்கவேண்டிய விஷயம், மதிக்க வேண்டிய விஷயம்.

பாரதியார்.

'காக்கை குருவி எங்கள் சாதி-நீள்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்'

என்றுதான் உறவு கொண்டாடுகிறார்.

சமுதாயத்தின் பகுதியாகிய மனிதனுக்கும் சமுதா யத்துக்கும் பல்வேறு உறவுகள் உள்ளன. நம்மைப் பற்றிய உணர்வு, தாம்பத்திய உறவு, உற்றார் உறவினர் உறவு, தோழமை உணர்வு, பக்தி உணர்வு எனப் பல் வேறு உணர்வுகள் நம் உறவுகளைச் சிருஷ்டிக்கின்றன.

ஒரு பெரிய வாத்திய இசைக்குழுவிலிருந்து எழும் ஒருங்கிணைந்த நாதம், ஒரு 'பீத்தோவ'னாக 'மோசார்ட்'டாக 'பாக்' ஆக மலர்வதைக் கண்டு நாம் அதிசயிக்கிறோம். உண்மையிலேயே நாமும் அத்தகைய பெரும் வாத்தியக் குழுவை வைத்துக்கொண்டு நம் வாழ்வை நிர்வகிக்கிறோம். நமது வாத்தியங்கள்: அன்பு, ஆசை, கனவு, லட்சியம், திறமை, துடிப்பு, மகிழ்ச்சி, நிறைவு, செயல் என்று பல்வேறு வகைப்பட்டு இருக்கின்றன. இவற்றைச் சரியான நேரத்தில் சரியான படி வாசித்து வாழ்க்கை என்ற ஓர் இசைக் கச்சேரியை Symphonyஐ நாம் நிர்மாணிக்கவேண்டும்.

லயம் தப்பிய வாத்தியங்களும் இருக்கின்றன. காமம், வெறுப்பு, பொறாமை, வஞ்சம், கோபம் என்று தாளத்துக்கு ஒத்துவராத இசை எழுப்பும் வாத்தியங்களும் உள்ளன. இதை நாம் புரிந்துகொண்டு ஒதுக்கும்போதுதான் நல்ல உறவுகளை நாம் சிருஷ்டிக்க முடியும்.

'தான் என்ற முனைப்பு' நம்மை ஆட்டுவிக்கிறது. வாழ்விக்கிறது என்று சொல்லுகிறார்கள் மனோதத்துவ அறிஞர்கள். தான் என்ற முனைப்பு குறைந்துபோகும் போது நம்மைநாமே ஓர் உதவாக்கரை மனிதனாக எடை போடுகிறோம். தான் என்ற முனைப்பு அதிகமாகவும் கூடாது! அதிகமாகும்போது ஆணவம் அங்கே தலை தூக்குகிறது. கலைஞர்களிலிருந்து அரசியல்வாதிவரை ஆணவத்தால் அடைந்த அவதிகளை உலகம் நன்கறியும்.

தான் என்ற முனைப்புதான் ஜீவன். இதுதான் வாழத்துடிக்கிறது. உணவு, உடை, இடம், கௌரவம், மரியாதை, பெருமை, பாராட்டு, புகழ், சாதனை என்ற எல்லாவற்றையும் பற்றிப் படர்கிறது. இது ஜீவனது இயல்பு.

'தான் என்ற முனைப்பு பெரிய தலைவர்களுக்குத் தான் இருக்கலாம்; பெரிய தொழிலதிபர்களுக்கும் நிர்வாகிகளுக்கும்தான் இருக்கலாம்; அவர்களுக்குத் தான் அந்தத் தகுதி உண்டு' என்று பலரும் நினைக்கிறார்கள். அது சரியல்ல.

மாயவரம் முனிசிபல் உயர்நிலைப் பள்ளியில் நாயுடு என்பவர் பியூனாக வேலை பார்த்தார். மெலிந்த உடல்; குள்ளமான உருவம். தலையிலே முண்டாசிருக்கும். முரட்டுத் துணியிலான அரைக்கை சட்டைமீது குறுக்கும் நெடுக்குமாக அரசாங்கப் பட்டயம் தொங்கும். பள்ளியில் அதுதான் கடைசி—அடிமட்ட வேலை என்று சொல்லவேண்டும்.

எனினும், நாயுடு கம்பீரம் மிக்க மனிதர். கண்டிப்பானவர். இரண்டு நிமிடம் 'லேட்'டாக வந்தாலும் தலைமை ஆசிரியரிடம் கொண்டு நிறுத்திவிடுவார். தலைமை ஆசிரியரிலிருந்து எல்லோரும் அவரை 'மிஸ்டர் நாயுடு' என்றே அழைத்தார்கள். அவ்வளவு கௌரவமாக நடத்தப்பட்டார். புழுக்களைப்போல் முதுகெலும்பின்றி நெளியும் பெரிய மனிதர்களைவிட, அவர் கம்பீரம் மிகுந்தவராக இருந்தார். அவர் தன்னை மதித்தார்.

மனிதத் தேவைகள் என்ன? மனித மனம் எதை நாடி ஓடுகிறது? மனித மனத்தைத் தூண்டிவிடும் வலு படைத்த சக்தி நிறைந்த சொல் எது, செயல் எது என்று புரிந்துகொண்டோமானால்...!

மனிதனுக்கு உடல்தேவைகள் உள்ளன. பசி, தாகம், தூக்கம், உடலுறவு, உடை, இடம், பாதுகாப்பு போன்ற பல தேவைகள் இருக்கின்றன. இவை அடிப்படைத் தேவைகள்.

அதற்கும் மேலே இந்தச் சமுதாயத்தைச் சேர்ந்தவன் நான், இந்த மதத்தைச் சேர்ந்தவன், இந்த இனத்தைச் சேர்ந்தவன், இந்தச் சங்கத்தைச் சேர்ந்தவன் என்ற பிணைப்பு இருக்கிறதே. அதற்காக மனிதன் அவாவு கிறான். ''மகாத்மாகாந்தி சினிமா படத்தைப் பார்த் தேன். என்ன அற்புதமான மனிதர்!'' என்று ஒரு அமெரிக்கர் கூறும்போது, இந்தியன் என்ற உணர்வால் ஏதோ நானே காந்திபோல் பெருமைப்படுகிறேன்; இதைத்தான் (Sense of Belonging) 'சமுதாயத்தின் பகுதி என்ற பெருமை' என்று குறிப்பிடுகிறார்கள்.

உங்கள் நண்பர்கள் வீட்டு விருந்து ஒன்றுக்கு எல்லோரையும் அழைக்கிறார்கள், உங்களை மட்டும் விட்டு விடுகிறார்கள் என்று வைத்துக்கொள்ளுங்கள். அப்போது உங்கள் மனநிலை எப்படி இருக்கும் என்று எண்ணிப் பாருங்கள். சமுதாயத்தின் பகுதியிலிருந்து தள்ளப்படும்போது, ஒரு கல்யாணத்துக்கு உங்களுக்கு அழைப்பிதழ் வராதபோது, உங்கள் அலுவலகத்தில் எல்லோருக்கும் வேலை உயர்வு கொடுத்துவிட்டு உங்களுக் குக் கொடுக்காதபோது, பள்ளியில் எல்லோரையும் கிரிக்கெட் பயிற்சி முகாமுக்கு அழைத்துச்சென்று உங்களை விட்டுவிட்டுப் போகும்போது...என்ன நேர் கிறது? சமுதாயத்தால்—பிறரால் எப்படி நாம் ஏற்றுக் கொள்ளப்படுவதை அடிப்படை கௌரவமாகக் கருது கிறோம் என்பது விளங்கும். இது ஓர் அடிப்படை மனித இயல்பு என்று குறிப்பிடுகிறார் ஆபிரகாம் மாஸ்லோ என்ற மனோதத்துவ அறிஞர்.

மனிதன் சேர்ந்து வாழ விரும்புகிறான். சேர்ந்து வாழ்வது அடிப்படைத் தேவையாக இருக்கும்போது அதன் உண்மைகளை, நெளிவு சுளிவுகளைத் தெரிந்து கொள்ள வேண்டாமா?

# 4

'ஒரு ஆசை நம்முள் எழுந்ததானால், அதை அடையும் திறமை நம்முள் இருப்பதால்தான் அது நம்முள் எழுந்தது' என்கிறார் ஏர்ல் நைட்டிங்கேல் என்ற பிரபல எழுத்தாளர்.

ஆழ்ந்து சிந்தித்தோமானால், நாம் நமக்கென்று ஓர் உலகைச் சிருஷ்டித்துக்கொண்டு வாழ்ந்துவருவது புரியும். 'நான் இந்தியன்' என்கிறோம். 'தமிழ் எங்கள் உயிருக்கு நேர்' என்று பாடுகிறோம். 'எனது மதம் இதைப் போதிக்கிறது' என்று பெருமைப் படுகிறோம். 'எனது ஊர், எனது மொழி, எனது நாடு' என்று பேசுகிறோம். 'என் நண்பன் இவன், எனது அறை இது, எனது குழந்தை இவள்' என்று நாம் சொல்லிக்கொண்டே போகிறோம்.

நமது இந்த உலகத்தில் நாம்தான் தலைவன். நாம் தான் இயக்கம்.

இந்த 'தான்' என்ற முனைப்புத்தான் ஜீவனாகச் செயல்படுகிறது. இந்த 'தான்' என்ற முனைப்பு இல்லாத ஜீவன் விரைவில் செத்துவிடுகிறது. அதுவே 'தான்தான் எல்லாம்' என்று நினைக்கும் ஜீவனுக்கு ஆணவம் ஏறிப்போகிறது; அகம்பாவ நிலை அது.

ஜீவன் வாழத் துடிக்கிறது. எதையும் சமாளிக்க முயல்கிறது. எல்லாவற்றையும் அனுபவிக்க ஆசைப்படு கிறது. மேலும் தெரிந்துகொள்ள அவாவுகிறது. வாழ்வில் நிறைவை நோக்கிப் பயணம் செய்கிறது.

எப்படி என்று கவலைப்பட வேண்டியதில்லை. மனம் நோக வேண்டியதில்லை. ஒரு கம்பளிப்பூச்சியை முள்ளினால் குத்தினோமானால் அது சுருட்டிக்

கொள்கிறது, தன்னைப் பாதுகாத்துக் கொள்ள. அரவத்தைக் கேட்கும் ஆமை, கை காலைக் கூட்டுக்குள் இழுத்துக்கொள்கிறது. 'ஒரு ஆசை நம்முள் எழுந்த தானால், அதை அடையும் திறமை நம்முள் இருப்பதால் தான் அது நம்முள் எழுந்தது' என்கிறார் ஏர்ல் நைட்டிங்கேல் என்ற பிரபல எழுத்தாளர்.

உடலை வருத்திப் பட்டினி கிடக்கிறார் புத்தர் ஞானம் பெற உடல்தான் எலும்புக்கூடாயிற்றே தவிர, தெளிவு பெற்றபாடில்லை. அவ் வழியே வந்த ஒரு பெண் அளித்த பாலையும் உணவையும் உட்கொள்கிறார். அங்கே வந்த மற்றைய துறவிகள், அவர் உணவு உட் கொள்வதைக் கண்டு அதை 'உறுதி இல்லாமை' என்று எடுத்துக்கொண்டு பரிகசிக்கிறார்கள். புத்தர் கூறுகிறார், "வயிறு நிறையும்போதுதான் தெளிவாகச் சிந்திக்க முடிகிறது, தெளிவாகச் சிந்தித்தால்தான் ஞானமார்க்கம் புலப்படும்" என்று.

உணவு, உடை, கவிதை, நாடகம், நாட்டியம், இசை, சிற்பம், காதலுணர்வு, அன்பு எனப் பலவழிகளில் ஆனந்தம் காண முயல்கிறது ஜீவன். இவையெல்லாம் நியாயமான உணர்வுகள், நியாயமான ஆனந்தங்கள். வாழ்வின் இனிமைகளை எல்லாம் அனுபவிப்பதில் தவறேதும் இல்லை—நமது இன்பங்கள் பிறரது உரிமை களைப் பாதிக்காதபோது, நமக்கும் சூழ்நிலைக்கும் தீங்கு விளைவிக்காதபோது, ஆனந்தங்கள் அனுபவிக்கத் தான் படைக்கப்பட்டிருக்கின்றன.

வாழ்க்கை தினந்தோறும் மாறுதல்களைச் சந்தித்த வண்ணம் இருக்கிறது. அதை உணர்ந்து அதற்கேற்ப நடக்கவும், புதிய புதிய விஷயங்களைக் கற்றுக்கொள்ள வும் ஜீவன் அவாவுகிறது.

'ஏன்? எப்படி? என்ற கேள்விகள் மனித சிந்தனையின் பெரும் பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டதனாலேயே இவ் வுலகம் வசதிகளாலும்—விமானம், டெலிபோன், டெலிவிஷன் போன்ற சாதனங்களாலும் வளர்ந்திருக்கிறது. இது ஒருவகைப் பரிணாம வளர்ச்சி. அதை உணர்ந்து நாம் செயல்பட வேண்டும்.

''பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல—காலவகையினானே'' என்று கூறுகிறது நமது நன்னூல் பாடல். ''புதியன புகுதல் தவறில்லை. அது காலப் போக்கு'' என்று எடுத்துக்கொள்ளும் மனப்பக்குவம் வளர்பவர்களுக்கெல்லாம் வேண்டும். வாழ்வின் தாத்பரியங்களை, உண்மைகளை வாழ்வு முடிவதற்குள் நாம் கண்டுபிடித்துக் கடைப்பிடிக்க முயலவில்லையாயின், பயன் பெறவில்லையாயின் வாழ்ந்து என்ன பயன்?

வாழ்வு ஒரு நிறைவை நோக்கிப் பயணம் செய்கிறது. ஜீவன் இறப்புக்கு அப்பால்—பிறப்புக்கப்பால் மூலத்தை நோக்கிப் பயணம் செய்கிறது. இதையே ஒரு பிரெஞ்சு தத்துவஞானி, ''முழுமையை நோக்கிப் பயணம் செய்யும் தாகங்கொண்ட ஒரு பகுதி ஆத்மா'' என்று அழகாக ஆத்மாவைப்பற்றி எழுதுகிறார். மழைத்துளியாக விழுந்த நீர் வாய்க்காலாக, பேராறாக மீண்டும் கடலையே அடைவதுபோல, மூலாதாரத்தை நாடுவதன் மூலம் ஜீவன் நிறைவைக் காண முயல்கிறது என்கிறார்கள் தத்துவஞானிகள்.

ஆழ்நிலைத் தியானத்தின்மூலம் நாம் எங்கே ஒன்றிப் போகிறோம்? இந்தப் பிரபஞ்சத்துடன்; இப் பிரபஞ்சங்களை எல்லாம் இயக்கும் ஒரு மூலாதாரத்துடன். அங்கே நாம் முழுமை பெறுகிறோம். ''நீயே அது'' என்ற உபநிடத தத்துவத்தின் பூரணத்தை நாம் அங்கே உணர்கிறோம்.

இந்த ஜீவனின் இயல்புகளை அறிந்துகொள்வதனால் என்ன லாபம் என்று நீங்கள் கேட்கலாம்.

நாம் ஆண்டவனின் தனிப்பட்ட சிருஷ்டி என்ற நிறைவு ஏற்படுகிறது. தன்னம்பிக்கை ஏற்படுகிறது. 'ஆண்டவன் நம்முள் இருக்கிறான்' என்பதில் அசாத்திய தெம்பு ஏற்படுகிறது; எதையும் சமாளிக்கமுடியும் என்ற தைரியம் ஏற்படுகிறது; வாழ்வில் ஒரு பிடிப்பு ஏற்படுகிறது; இணைந்து வாழ்வதில் ஓர் ஆனந்தம் ஏற்படுகிறது.

பல விஷயங்களையும் தெரிந்து பயன் பெறுவதில் ஒரு துடிப்பு ஏற்படுகிறது; மூலாதாரத்தை நோக்கிய நல்வழிப் பயணத்தில் ஒரு நிறைவு ஏற்படுகிறது,

வாழ்வின் அர்த்தங்களைப் புரிந்துகொள்வோம்.

# 5

**'நம்மால் முடியும், நான் வல்லவன்; நினைத்ததை முடிப்பவன்' என்ற நம்பிக்கைகள் நம் உடலில் ஒரு துடிப்பை, ஒரு விறுவிறுப்பை, ஓர் ஆர்வத்தைத் தூண்டிவிடுகின்றன.**

அன்றாட வாழ்க்கையின் நெருக்கடியும் வேகமும் கனமும் அதிகமாயிருக்கும்போது, நாம் வாழ்க்கை என்ற ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப் படுகிறோம். 'நாம் யார்? நமது திறமைகள் என்ன? நமது வலிமைகளென்ன? நமது குணங்கள் என்ன? நாம் கடந்து வந்த வாழ்க்கைப் பாதை எப்படி நம்மை உருவாக்கி இருக்கிறது? உண்மையிலே நாம் எங்கே போக ஆசைப்படுகிறோம்? அதற்கான தெளிவான திட்டம் நம்மிடம் இருக்கிறதா? அந்த லட்சியத்தை

நோக்கித் திட்டங்களின்படி செயல்படுகிறோமா? என்றெல்லாம் நாம் சிந்தித்துப்பார்ப்பதில்லை.

நம்பிக்கைகள் (நாம் எதைப் போற்றுகிறோம்—மதிக்கிறோம் என்ற) நம் கொள்கைகள், நமது மனோ பாவம்—இந்த மூன்றும்தான் நம்மை உருவாக்கு கின்றன. நான் என்ற தன்மை, மனித உடலுக்கு 'இவர் இன்னார்' என்ற குண இயல்பைக் கொடுக்கிறது. மனித முகம் எப்படி ஒருவருக்கொருவர் வேறுபடுகிறதோ, அதே போல மனித குணங்கள் மனிதருக்கு மனிதர் வேறுபடு கின்றன.

மனத்தில் மாற்று எண்ணங்களை—நல்லெண்ணங் களை பயன் தரும் எண்ணங்களை—வாழ்விக்கும் எண்ணங்களை மலரவிடுவதன் மூலம் நாம் நம் பாதையை மாற்றிக்கொள்ளலாம்.

நம்பிக்கைகள் என்று எதைச் சொல்கிறோம்...?

'நம்மால் முடியும்! என்ற நம்பிக்கை. 'நான் உதவாக்கரை மனிதன்' என்ற எண்ணம். 'மனம் வைத்தேனேயானால் முடித்து விடுவேன்!' என்ற நம்மைப்பற்றிய உணர்வு. 'எல்லோரும் ஏன் இப்படி இகழ்ச்சியாக நடத்துகிறார்கள்?' என்ற சந்தேகம், இவை எல்லாம் நம்மைப்பற்றி நாம் கொண்டுள்ள எண்ணங்கள்; நம்பிக்கைகள். இவை ஆழ் மனத்தில் ஊறிப்போய், நம் ஆத்மாவில் ஐக்கியமாகி நம்மை இயக்குகின்றன.

இந்த நம்பிக்கைகள் எங்கிருந்து புறப்பட்டன?

நமது அனுபவங்களிலிருந்து; நமது குழந்தைப் பருவத்தில் நம் பெற்றோர் நம்மை எப்படி நோக்கி வளர்த்தார்கள் என்பதிலிருந்து; நமது ஆசிரியர் நம்மை

எப்படி நடத்தினார் என்பதிலிருந்து: நாம் மதிக்கின்ற மனிதர்கள் நம்மைப்பற்றி என்ன அபிப்பிராயம் கொண்டிருந்தார்கள் என்பதில் எழுந்த நம்பிக்கைகள் இவை. 'நம்மால் முடியும், நான் வல்லவன்; நினைத்ததை முடிப்பவன்' என்ற நம்பிக்கைகள் நம் உடலில் ஒரு துடிப்பை, ஒரு விறுவிறுப்பை, ஓர் ஆர்வத்தைத் தூண்டிவிடுகின்றன.

மாறாக, 'என்னால் முடியாது, என் வாழ்க்கை இவ்வளவுதான்!' என்ற சுய பரிதாபம் சோக முத்திரைகளை மனத்தில் குத்தி நம் சக்தியை வடித்துவிடுகின்றன.

அதேபோல, ஒரு மனிதன் கடைப்பிடிக்கும் கொள்கைகள் ஒரு மனிதனை நமக்கு அடையாளம் காட்டுகின்றன. 'இவர் சொன்னபடி நடந்து கொள்வார்' என்று ஒருவரை நம்பி ஒரு தொழிலில் இறங்குகிறோம். 'இவர் வேஷதாரி; அயோக்கியர்' என்று பொதுவாழ்வில் உள்ள மனிதரை எடைபோடுகிறோம். அந்த மனிதர் தன் வாழ்வில் கடைப்பிடிக்கும் கொள்கைகள் அவரைக் காட்டிக்கொடுக்கின்றன. 'இவர் நல்ல உயர் குடும்பத்திலிருந்து வருபவர்' என்று எண்ணி ஒருவரைப்பற்றி முடிவு செய்கிறோம். வாழ்க்கை நெறிகளை—தர்ம நெறிகளைப் பாரம்பரியமாக, உயர் குடும்பங்கள் கடைப்பிடிக்கின்றன.

கொள்கைகள் என்பதைத் தாண்டி நாம் பார்ப்போமானால், நாம் எதைப் போற்றுகிறோமோ, நாம் எதை மதிக்கிறோமோ நாம் அதுவாக மாறுகிறோம்—அந்தக் குணங்களை நாம் பிரதிபலிக்கிறோம் என்பது தெரியவரும். மகாத்மா காந்தியைப் போற்றிய ஒரு இந்திய சமுதாயத்தில் அன்று கிராமத்து மக்கள்—

படிக்காதவர்கள் என்று நிறைய இருந்தார்கள். மகாத்மா காந்தியைப் போற்றியதன்மூலம் தங்கள் வாழ்வையும் வாழ்க்கை நெறிகளையும், தியாகப் பண்பு களையும் உயர்த்திக்கொண்டார்கள் மக்கள். மக்களின் தரமும் உயர்ந்தது. இன்று பொய்யர்களையும் அயோக் கியர்களையும்—பெரிய பதவியிலிருக்கிறார்கள் என்ற ஒரே காரணத்துக்காகப் போற்றுவதன்மூலம் தங்கள் தலைவர்களது தரத்துக்கு மக்கள் தங்களையும் தாழ்த்திக் கொண்டு நிற்கிறார்கள். 'பொது வாழ்வில் திருடினால் என்ன, பொய் சொன்னால் என்ன, ஏமாற்றினால் என்ன தவறு?' என்று மன அளவில் கொள்கைகள் பரவு கின்றன.

அதேபோல, இளமையையும் பாலுணர்ச்சியையும் முன்னிறுத்தும் சினிமா நட்சத்திரங்களின் உலகினில் 'தாசர்' களாகவும், 'பிரியர்'களாகவும் இளைஞர்கள் வளர்ந்து திசை தப்பிக்கிடக்கும் அவலநிலை தமிழ் நாட்டில் பரவி வருகிறது.

'எந்தப் பண்புகளை நாம் போற்றுகிறோம்' எனும் போக்கு நமது குணநலன்களின் ஒரு பகுதியாக மாறு கிறது. ஆகவேதான் நாம் நல்லதைப் போற்றக் கற்றுக் கொள்ளவேண்டும். உயர்ந்ததைப் போற்ற, குணத்தால் உயர்ந்தவர்களுக்கு ஊக்கம் கொடுக்க நாம் முன்வர வேண்டும். வலிமைகளைப் போற்றக் கற்றுக்கொள்ள வேண்டும். ஆண்டவனைப் பூஜிப்பவர்கள் சொல்லும் மந்திரங்களின் அர்த்தங்களை உற்றுக் கவனித்தீர் களானால் அவை அனைத்தும் வலிமையைப் போற்று வனவாய் அமைந்திருப்பதைக் காணலாம். வலிமையைப் பாராட்டும்போது நாமும் வலிமை பெறுகிறோம்.

அடுத்தது மனோபாவம். ஓர் உற்சாகமான மனோ நிலையில் எதையும் அணுகும்போது எதுவும் சாத்திய

மாகிறது. ஓர் உற்சாகமான மனநிலையில் எந்தச் சூழ் நிலையைப் பார்த்தாலும், நமது உற்சாகம் சூழ்நிலையை மாற்றி விடுகிறது. அழகில்லாத பெண்களையும் ஆண் களையும் காதலித்துக் கல்யாணம் செய்துகொண் டவர்கள் எதைக்கண்டு மோகித்தார்கள்? மனநிலையை, பண்புகளை.

மனோபாவத்தை, ஆங்கிலத்தில் Attitude என்று கூறுவார்கள். அவ்வப்போது எழும் உணர்வு நிலைகளை மூட் (Mood) என்று கூறுவார்கள். காதல் கவிதை எழுதும் கவிஞன் தன்னை எந்த 'மூடில்' வைத்துக்கொள்கிறான் என்று ஒருகணம் எண்ணிப்பாருங்கள். போருக்குப் புறப் படும் இளைஞனுக்கு அன்னை கூறும் அறிவுரைகள் எந்த உணர்வு நிலைக்கு—உறுதிக்கு—அவனை உயர்த்துகின்றன என்று எண்ணிப் பாருங்கள். நமக்கு வேண்டிய மன நிலையை—உணர்வு நிலையை—கற்பனையின் மூலம், நமக்குப் பிடித்த ஒரு பாட்டின்மூலம்—முன்பு நிகழ்ந்த ஒரு சம்பவத்தின்மூலம்—நாம் உருவாக்கிக்கொள்ளலாம். ஆக்க சக்தி படைத்தோரெல்லாம், காரியம் ஆற்றுவதற்கு முன் முதலில் தங்களையும் சகதொழிலாளர்களையும் ஒரு 'மூடில்' வைத்துக்கொள்கிறார்கள். 'விஷயங்களை எப்படி அணுகுகிறோம் என்கிற மனோபாவத்தில்தான் வெற்றி யும் தோல்வியும் அமைகின்றன' என்றான் ஓர் அறிஞன்.

## 6

**தன்னம்பிக்கை குறையும்போது, அதைரியம் ஏற்படும்போது இது உலக இயல்பு என்பதை நாம் உடனடியாக நினைவுக்குக் கொண்டுவர வேண்டும். அப்போதுதான் அதைரிய எண்ணங் களைப் பலவீனப்படுத்தமுடியும்!**

தன்னை மதிப்பவர்களை, தன்னை உயர்தரமாக நடத்துபவர்களை, கம்பீரம்மிக்க மனிதர்களை, தைரிய யத்தின் வெளிப்பாடுகளை, உற்சாகத்தின் உருவங்களை வாழ்வின் எல்லாத் துறையிலும் நாம் காண்கிறோம்.

அப்போது நாம் என்ன நினைக்கிறோம்? 'ஆகா, இவரல்லவா மனிதர்!' என்று மனத்துக்குள் அவரைப் பாராட்டுகிறோம். எழுந்து அவருக்கு வணக்கம் சொல்கிறோம். அவரை மதிக்கிறோம்.

பேச்சில் ஒரு நிதானம், பிறர்மீது ஒரு அன்பு, சொற்களில் ஒரு கண்ணியம், விஷயங்களை முடிவெடுப்பதில் ஒரு தெளிவு, செயலில் உடனடியான ஒரு ஈடுபாடு—இத்தனை செயல்களும் எந்தவிதமான நம்பிக்கைகளிலிருந்து எந்த விதமான எண்ணங்களிலிருந்து புறப்பட்டன—புறப்படுகின்றன?

எல்லாவற்றுக்கும் மூலகாரணம் தன்னைப்பற்றிய நம்பிக்கை என்ற ஒரு சொற்றொடரில் போய்முடியும். தைரியம் மிகுந்த எண்ணங்களும், செய்யவேண்டும் என்று செயலைத் தூண்டும் எண்ணங்களும் எல்லோர் மனத்திலும் எழுகின்றன. பலரிடம் சில நிமிடங்கள், சில மணி நேரங்கள், சில நாட்கள் என்ற அளவில் நின்று விடுகின்றன.

வெற்றி பெற்றோரிடம் இத்தகைய எண்ணங்கள் அடிக்கடி திரும்பத் திரும்ப மனத்தில் ஓடிக்கொண்டே இருக்கிறது. இதன் காரணமாக அது அசைக்க முடியாத நம்பிக்கையாக வேர்விடுகிறது. அவர்கள் தங்கள் லட்சிய தீபத்தை அணையவிடுவதில்லை. மாறாகப் பெரும்பாலான மக்கள் கொஞ்ச காலம் கழித்து வேறு ஒரு பொருள், மனிதர், லட்சியம் என்று பிற விஷயங்கள் அவர்களது

கவனத்தை ஈர்த்துவிட இடம் கொடுத்து விடுகிறார்கள். இவர்களை ஆங்கிலத்தில் Drifters- 'ஆசை மாறிகள்' 'ஒன்றிலும் நிலைத்து நிற்காதவர்கள்' என்று கூறுவார்கள்.

நம் மனத்தின்மீது ஏதும் தப்பில்லை. நாம்தான் பல்வேறு காரணங்களுக்காக, நம் லட்சியத்தை மாற்றிக் கொண்டே இருக்கிறோம். நமது லட்சியங்களில் நமக்குள்ள உறுதி வேர்விட, நம்பிக்கையாக மாற நாம் இடம் கொடுப்பதில்லை.

தொழிலில் வெற்றிபெற்றவர்களை ஆராய்ந்தோமானாலும், அவர்கள் எங்கே வெற்றி வாய்ப்பு அதிகமிருக்கிறதோ அந்தத் தொழிலையே பெரும்பாலும் எடுத்து வெற்றி காண்கிறார்கள் என்று ஆராய்ச்சி ஏடுகள் புலப்படுத்துகின்றன.

ஆகவேதான் வெற்றியடையும் வாய்ப்பு அதிகம் உள்ள விஷயங்களாக எடுத்துக்கொள்ளுங்கள் என்று பெரியவர்களுக்கும், வெற்றி வாய்ப்பு மிகுந்துள்ள காரியங்களை, கணக்குகளை, பாடங்களை அதிகம் கொடுத்துக் குழந்தைகளை வளருங்கள் என்று பெற்றோருக்கும் மனோதத்துவ அறிஞர்கள் அறிவுரை கூறுகிறார்கள்.

கம்பீரம் மிக்க பெரிய மனிதர்களை எப்போதும் அதே உற்சாக நிலையில், தைரியப்போக்கில் 24 மணி நேரமும், 365 நாட்களும் இருக்கிறார்கள் என்று நாம் நம்புகிறோம்.

உண்மை அதுவல்ல, அவர்களும் நம்மைப் போன்றவர்கள் தான். அவர்களிடமும் அதைரியம் ஓடுகிறது. அவர்களுக்கும் நிதானம் தவறுகிறது. அவர்களும் தங்களைப்பற்றிச் சந்தேகப்படுகிறார்கள். ஆனால்,

அவர்கள் தங்களைப்பற்றி எழும் சந்தேகங்களைப் பெரிதுபடுத்துவதில்லை. சந்தேகத்துடன் நிரந்தரமாக வாழ்க்கை நடத்துவதில்லை! அத்தகைய அதைரிய எண்ணங்கள் எழுந்தவுடன் அத்துடன் கொஞ்ச நேரம் உறவாடிவிட்டு லட்சியமென்ன, மேற்கொண்டு என்ன செய்யவேண்டும் என்ற எண்ணங்களில்—செயல்களில் மீண்டும் மீண்டும் ஈடுபடுகிறார்கள்.

தன்னம்பிக்கை குறையும்போது, அதைரியம் ஏற்படும் போது, இது உலக இயல்பு என்பதை நாம் உடனடியாக நினைவுக்குக் கொண்டுவரவேண்டும். அப்போதுதான் அதைரியம் எண்ணங்களைப் பலவீனப்படுத்தமுடியும்!

மேலும், நம் அனுபவத்தில் சிற்சில நாட்களில் சிற்சில விஷயங்கள் எல்லாம் நேர்மாறாக நடப்பதைக் காண முடியும். அந்த நேரங்களில் நல்ல பிரார்த்தனையிலோ அல்லது தோட்டம் போடுதல், வீட்டைச் சுத்தம் செய்தல், சினிமாவுக்குப் போவது என்பன போன்ற நம் லட்சியத் துக்கு உறவில்லாத வேறு காரியங்களில் ஈடுபடுவது நல்லது.

இல்லினாய் பல்கலைக்கழகத்தில் முத்ரா என்பவர், படிக்கும் குழந்தைகளைப்பற்றி ஓர் ஆராய்ச்சி செய்தார். அவர் எழுதுகிறார்: 'ஒரு மாணவன் கல்லூரி நுழைவுத் தேர்வில் 98 சதவீதம் மார்க் பெற்றிருந்தான். அந்த மார்க் அவனுக்குத் தெரியப்படுத்தப்படவில்லை. ஆனால், ஏதோ தவறாகக் கிடைத்த ஒரு தகவல்படி தன்னுடைய IQ 98 என்று கணக்கிடப் பட்டிருப்பதாகப் புரிந்துகொண் டான் அவன்! அவனுக்குக் கல்லூரியில் இடம் கிடைத்தது. ஆனால், அந்த மாணவனோ மனம் புழுங்கினான், பிறகு வந்த கல்லூரிப் பரீட்சைகளில் அவன் நன்றாக எழுத வில்லை, தோற்றுப் போனான்.

'ஆறு மாதம் கழித்துத் தன்னால் கல்லூரியில் நன்கு படித்து நல்ல மதிப்பெண்கள் பெறமுடியவில்லை என்றும், தான் கல்லூரியை விட்டுவிடப் போவதாகவும் கூறினான். அவன் புத்திசாலி என்று நம்பிய பெற்றோர், அவனைக் கல்லூரி நுழைவுத் தேர்வு நடத்திய கல்வி ஆலோசகரிடம் அழைத்துச் சென்றார்கள். அவர் கூறினார்: 'தம்பி! நீ பெற்ற மார்க்கின் சதவீதம் தொண்ணூத் தெட்டே ஒழிய உனது புத்திசாலித்தனம் (IQ) 98 அல்ல. அதைவிட அதிகம்! உனது (IQ)-வின் சரியான கணக்கீடு 140 ஆகும். இந்தக் கல்லூரியில் உள்ள மிக புத்திசாலிகளுள் நீயும் ஒருவன்' என்றார்.

'மாணவன் தன்னைப் பற்றிய தவறான சுயமதிப்பீட்டை எண்ணி வெட்கினான். பின்னால் கல்லூரியில் அவன் பிரமாதமாகப் படித்தான்; மார்க் வாங்கினான்.'

இது கதையல்ல, நிஜமாக நடந்தது.

•

'எனக்குக் கணக்கு வராது!' என்று நீங்கள் நம்பினீர்களானால். கணக்குப் போடும்போது எங்காவது தப்பாகத்தான் போகும். 'பட்ட காலிலே படும்' என்று சொல்லிக்கொண்டால், உங்கள் கால் எங்காவது மீண்டும் முட்டிக்கொள்ளத் தயாராயிருக்கும்!

நாம் எதை நம்புகிறோமோ அதை நிறைவேற்றி வைக்க முயல்கிறது நம் மனம்.

நமது எண்ணம் ஆழமான உணர்வுகளுடன் கலக்கப்படும்போது நம்பிக்கையாய் மாறுகிறது. நமது நம்பிக்கைகள் நம் வாழ்வை அமைக்கின்றன.

அமெரிக்க இந்தியன் 'வேலை செய்யாதவன், குடிகாரன்' என்ற எண்ணம் அந்தச் சமுதாயத்தையே புரையோடிப் போகச் செய்துவிட்டது. நாம் எப்படி நடந்துகொள்கிறோமோ அப்படித்தான் பிறர் நம்மை மதிக்கிறார்கள் என்பதை நாம் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும்.

ஊழலே நியதியாய், அதிகாரச் செல்வாக்கே ஆட்சியாய், பிறன் காலைத் தொட்டுக் கும்பிடுவதே தொழிலாய்ப் போய்விட்ட ஒரு தமிழ்நாட்டு அரசியல்வாதியைப் பற்றி மக்கள் என்ன நம்பிக்கை கொண்டிருக்கமுடியும்? இத்தகைய கும்பலைப்பற்றி டில்லியும், வட நாட்டாரும் என்ன நினைத்துக்கொண்டிருப்பார்கள் என்பதற்குச் சோதிடமா வேண்டும்?

நெறிகளை மதிக்காத மனம் தன்னை மதிக்காது போவதில் வியப்பில்லை. தர்ம நெறிகளை மறந்தும் கடைப்பிடிக்க விரும்பாத அரசியல்வாதி, தன்னைப் பற்றி என்ன நம்பிக்கை கொண்டிருப்பார் என்பதற்கு—கைப்புண்ணுக்குக் கண்ணாடியா வேண்டும்.

மனோதத்துவப் பேராசிரியர்களின் மாநாட்டில் அதன் தலைவர் ஒருமுறை, "நம்பிக்கை என்பது மின்னல் போலத் திடீரென்று ஏற்பட்டு மறுநாளே நம் வாழ்வை மாற்றி விடுவதில்லை. நம்பிக்கை என்பது கொஞ்சங் கொஞ்சமாக ஏற்படும் விஷயம். 'முடியும், முன்னேறுவேன்!' என்று எண்ணும் இளைஞன், பல்வேறு சந்தர்ப்பங்களில் ஊக்கம் பெற்றுப் பெற்று. வெற்றியாளனாக மாறுகிறான். அதேபோல், 'நான் தோல்வியாளன்' என்று எண்ணுபவன் அடிபட்டு அடிபட்டு, காலப்போக்கில் அப்படியே மாறுகிறான். இந்த மாறுதலை உண்டு

பண்ணப் பதினான்கு ஆண்டு காலம் பிடிக்கிறது என்று நான் நினைக்கிறேன்!'' என்று கூறினார்.

''பதினான்கு ஆண்டு என்று ஆராய்ச்சிகளின் முடிவாக நான் கூறவில்லை. நம்பிக்கை பல வெற்றி களின் விளைவாக நாட்பட்டு ஏற்படும் விஷயம் என்பதை விளக்கத்தான் அப்படிக் கூறினேன்'' என்றார் அவர்.

# 7

**'எண்ணம் நம்பிக்கையாய், நம்பிக்கை செயலாய், செயல் பழக்கமாய், பழக்கம் குணநலன்களாக-விதியாக அமைகிறது'.**

நமக்கும் நம் மனச்சாட்சிக்கும் உள்ள உறவு; நம் மனச்சாட்சிக்கும் நம் செயலுக்குமுள்ள உறவு—இவை நமது குணநலன்களை — காரெக்டரை — நிர்ணயிக் கின்றன.

ரால்ப் வால்டோடிரைன் என்ற தத்துவஞானி 'பிரபஞ்சத்துடன் ஒன்றிப் போய்' (In tune with the infinite) என்ற தலைப்பில் ஓர் அற்புதமான நூலை எழுதியிருக்கிறார். அந்தத் தத்துவஞானியின் பயன் மிக்க வாசகங்களை மீண்டும் நினைவுபடுத்த விரும்பு கிறேன்.

''நம்மால் முடியும் என்ற எண்ணம் மனத்தில் தோன்றும்போது அதைச் செய்து முடிக்கும் தார்மீக வலிமை உடலில் பிறக்கிறது. திரும்பத் திரும்ப எண்ணும் ஓர் எண்ணம் நம்பிக்கை ஆகிறது. நம்பிக்கை நம்மை செயல்படத் தூண்டுகிறது. திரும்பத் திரும்பச் செய்யப் படும் செயல் பழக்கமாய் மாறுகிறது. பழக்கங்கள் மனிதனின் குணநலன்களாய் மாறுகின்றன. அவனது குணநலன் அவனது விதியை நிர்ணயிக்கிறது. எண்ணம் நம்பிக்கையாய், நம்பிக்கை செயலாய், செயல் பழக்க

மாய், பழக்கம் குணநலன்களாக—விதியாக அமை கிறது.'' இங்கே நாம் கவனிக்க வேண்டிய மிக முக்கிய விஷயம், எப்படி எண்ணங்கள் நமது நம்பிக்கையாக மாறுகிறது என்பதுதான்.

ஒரு வீடு கட்டவேண்டும். ஒரு பெரிய தொழிலை உருவாக்கவேண்டும். ஒரு தலைவனாக வேண்டும் என்ற எண்ணம்—ஒரு சாதாரண எண்ணமாக மனத்துள் தோன்றுகிறது. 'நம்மிடம் என்ன இருக்கிறது? வீடு கட்டப் பணம் வேண்டாமா? மனை வேண்டாமா? போதுமான வருமானம் வேண்டாமா?' என்று மனம் வரிசையாக எண்ணங்களை அடுக்குகிறது. நடுவில் 'முடியுமா' என்ற ஒரு சந்தேகத்தையும் கிளப்புகிறது. 'நம்மிடம் இவ்வளவு சேமிப்பு இருக்கிறது. வங்கியில் இவ்வளவு கடனாக வாங்கலாம், மாதாமாதம் இவ்வளவு என்று கட்டிவிடலாம்' என்று இழையோடு இழையாக மற்றோர் எண்ணத்தொடர் ஓடுகிறது. ''ஏதோ முடியும் போலிருக்கிறதே! முயன்றால் முடியலாம் போலிருக் கிறதே!' என்ற தெம்பைக் கொடுக்கும் உற்சாகத்தை ஊட்டிவிடும் ஓர் எண்ணத்தொடர் ஊடே ஓடுகிறது.

மலை உச்சியில் வீடு கட்டிக் கொள்பவர்கள், சுலப மாக ஏறி இறங்க எப்படி வழி கண்டுபிடிப்பார்களாம், தெரியுமா?

தங்கள் மாட்டை மேய்வதற்காக அவிழ்த்துவிட்டு விடுவார்களாம். மாடு, அப்படி இப்படி என்று கவனித்து ஏறி இறங்கி மலையிலிருந்து எளிதாகக் கீழிறங்க ஒரு நல்ல வழியைக் கண்டுபிடித்து, தினமும் கீழே போய்ப் புல்மேய்ந்துவிட்டு வருமாம். மனமும் அப்படித்தான்.

அதாவது, மனத்துக்கு ஒரு கடைசி லட்சியத்தை, ஆசையைக் காட்டி விட்டோமானால்—அதை எப்

போதும் அங்கே நிலைநிறுத்தினால் போதும்—அது எப்படி அதை அடைவதென்ற வழியைத் தானே கண்டு பிடித்துக் கொடுக்கும் என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

''மனம் தன்னைத்தானே உந்தித் தள்ளி, தவறான பாதையில் இடிபட்டுத் திரும்பி, சரியான பாதைக்கு மீண்டும் மீண்டும் வரும் ஒரு யந்திரம்'' என்கிறார் மேக்ஸ்வேல் மால்ட்ஸ் மனத்தைப்பற்றி.

எண்ணம் நம்பிக்கை பெறாதபோது எதுவும் நடப்பதில்லை. அப்போது எண்ணம் வெறும் சோம்பேறியின் ஆசையாய், ஊமையனின் கனவாய், பாலைவனத்தில் விழுந்த மழைத்துளியாய்ப் போய்விடுகிறது.

மனத்தில் நம்பிக்கை என்ற பசை, எண்ணத்துக்கு ஈரம் கொடுத்து உயிர் கொடுக்கிறது.

விடியற்காலையில் மனம் கனவு காண்கிறது. அதை நிஜமாக நடக்கிறாற்போல உடல் அனுபவித்தால் பயத்தின் விளைவுகள், போராட்டத்தின் விளைவுகள் எல்லாம் நெஞ்சழுத்தமாகவும், மூச்சுப்பிடிப்பாகவும் உடலில் வெளிப்படுகிறது. உடல் வியர்க்கிறது.

கவனியுங்கள், மனத்துக்கு ஒரு விஷயத்தின் உண்மை, பொய்களைப்பற்றி ஏதும் அக்கறை இல்லை. மனம் எப்படிப் பார்க்கிறதோ அப்படியே அதை ஏற்றுக் கொள்கிறது.

அதாவது மனம் நடப்பதை நம்புகிறது. மனம் நம்பும்போது, உடலின் எல்லா உறுப்புக்களையும் தன் நம்பிக்கைக்கேற்ப மனம் இயங்கச் செய்கிறது—நம்பிக்கையின் வலிவைக் கவனியுங்கள்.

சில ஆண்டுகளுக்குமுன் நோயுற்ற ஓர் இளம் தாயை டெலிவிஷனில் காட்டினார்கள். அந்த இளம் பெண்ணுக்கு மூன்று குழந்தைகள். மருத்துவர்களோ,

'இன்னும் ஆறு மாதம்தான்' என்று கெடு வைத்திருந்தார்கள். அவளோ 'என்னுடைய குழந்தை களை நல்லவிதமாக வளர்க்கும் ஒரு நல்ல குடும்பத்தைக் கண்டுபிடித்து இக் குழந்தைகளை ஒப்படைக்கும் வரை நான் எப்படிச் சாகமுடியும்?' என்றாள். அந்தப் பெண் மணி, மூன்றாண்டுகள்வரை உயிரோடிருந்தாள். நல்ல குடும்பத்தில் தன் குழந்தைகளைப் பத்திரமாக ஒப்படைத்த பிறகுதான் இறந்து போனாள்! அவளது நம்பிக்கையின் வலிமையைக் கவனியுங்கள்.

காலஞ்சென்ற உங்கள் தந்தையின் பொடிமட்டை உங்களுக்கு, உங்கள் தந்தை உங்கள் அருகிலிருக்கும் ஒரு நம்பிக்கையையும் தைரியத்தையும் கொடுக்குமானால் விடாதீர்கள்! யாரையும்பற்றிக் கவலைப்படாதீர்கள்! 'மூட நம்பிக்கைகள்!' என்று யாராவது பகுத்தறிவுவாதி கள் கூற முன் வருவார்களானால், அந்த வாதத்தை ஆழமாகக் குழி தோண்டிப் புதையுங்கள்!

சாம்சனின் தலைமுடியில்தான் அவன் பலம் இருக்கிறது என்ற எண்ணத்தை வைத்து எடுக்கப்பட்ட 'சாம்சன் அண்ட் டிலைலா' என்ற திரைப்படத்தைப் பார்த்திருப்பீர்கள். சாம்சனின் தலைமுடி வெட்டப் பட்டபோது அவன் பலவீனப்படுகிறான் அவனைச் சங்கிலியால் பிணைக்கிறார்கள். மீண்டும் முடி, முன் போல் வந்துவிட்டது என்பதை அவன் உணர்ந்த போது மாடமாளிகைகளைச் சரியச் செய்கிறான் சாம்சன்! நம்பிக்கை தந்த வலிமை!

மருந்து எனச் சொல்லி நம்பிக்கைமூலம் குணப் படுத்தும் 'கை ராசி'க்கார மருத்துவர்கள் உலகில் ஏராளம். அறுபது, எழுபது சதவிகித நோய்கள் உண்டாக மனம்தான் காரணம்—மனமாறுபாடு

நெருக்கடி, சோகம், பயம்தான் நோயின் முதற்காரணம் என்று மருத்துவ நூல்கள் எழுதுகின்றன.

நம்மைப்பற்றி நாம் என்ன நினைத்துக்கொண்டிருக்கிறோம்? அதற்கேற்பத்தான் உடல் இயங்குகிறது. அதை ஒட்டித்தான் சூழ்நிலையும் இயங்குகிறது.

## 8

மனம், ஒரு குழந்தைபோல நாம் சொல்வதை உடனே நம்பிவிடுகிறது. ஆகவேதான் எளிதான விஷயங்களாக எடுத்துக்கொண்டு வெற்றி அனுபவங்களை, வாழ்வில் நாம் நிறைக்க முயலவேண்டும்.

''உங்களுடைய சிறந்த நண்பனாக எப்படி நீங்கள் இருக்கமுடியும்?'' என்ற தலைப்பில் சில ஆண்டுகளுக்கு முன் ஒரு புத்தகம் வந்தது. அந்தத் தலைப்பின் பொருளைத்தான் ''உள்ளுறவு'' என்கிறோம். நம்மை நமக்குப் பிடித்திருக்கிறதா? நம்மை நாமே மரியாதையுடன் நடத்துகிறோமா? நம்மைப்பற்றி நமக்கே பெருமை ஏற்படுகிறதா? எனும் கேள்விகள், நமக்கும் நம் மனத்துக்கும் உள்ள உள்ளுறவைக் காட்டுகின்றன.

இரண்டாவதான உறவு—குடும்ப, சமுதாய உறவு. மூன்றாவது வகையான உறவு—நமக்கும் இப் பிரபஞ்சத்துக்குமுள்ள உறவு.

முதலாவதான உள்ளுறவைக் கவனிப்போம். இந்த உள்ளுறவுதான், நம்மைச் சமநிலையில் வைத்திருக்கிறது; நம் மனத்துக்குச் சாந்தி அளிக்கிறது; நிறைவு தருகிறது. நம் வாழ்வைப்பற்றி, நாம் வாழும் முறையைப்பற்றி நம்மைப் பெருமைப்படவைக்கிறது.

மன அமைதி; மன நிம்மதி; மனச் சாந்தி! வாழ்வின் மகத்தான லட்சியம் அது. அடைந்தோமானால் மகத்தான சாதனை அது.

நம்மைப்பற்றி — உள்ளுறவைப்பற்றி, நமக்கு நாமே நல்ல நண்பனாக இருப்பதுபற்றி நாம் முதலில் புரிந்துகொள்ளவேண்டும்.

''நாம் என்ற இந்த ஆத்மாவின் புனிதத்தையும் உயர்வையும் உணர்ந்து அந்த ஆத்மாவை உயர்நிலைக்கு அழைத்துச் செல்லாதவரை, நம்மை நாமே சரிவர உணராதவரை, குடும்பத்துடனும் சமுதாயத்துடனும் நம்மால் நல்லுறவு கொள்ளமுடியாது. பிரபஞ்சத்தைத் துணைக்கு அழைக்கமுடியாது.

ஏன் நம்மை நாம் மரியாதையுடன் நடத்துவதில்லை. ஏன் நம்மைப்பற்றித் தாழ்வு மனப்பான்மை கொண்டிருக்கிறோம் என்பதைக் கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்.

நமது புத்திசாலித்தனத்தைப்பற்றி நமது திறமையைப்பற்றி நமது பழகும் தன்மையைப்பற்றி நமக்கே சந்தேகம், தன்னம்பிக்கை இன்மை. இந்தச் சந்தேகங்கள் காரணமாக பிறரைத் தேவைக்கு மேல்—உண்மைக்கு மேல் உயர்வாக நாம் மதிப்பிடுகிறோம். நம்மைத் தாழ்த்திக்கொண்டு நம்மை நாமே சவுக்கால் அடித்துக் கொண்டிருப்பது, குற்றம் கண்டுபிடித்துக் கொண்டிருப்பது எதில் முடிகிறது? நம்மைப் பற்றிய தாழ்வான எண்ணங்கள் வலுப்பெறுவதில், 'நான் உதவாக்கரை. என்னால் எதுவும் முடியாது!'' ''நான் பழகத் தெரியாதவன்'' என்று மனம் நம்பத் துவங்குகிறது.

உள்ளுறவைப் பாதுகாக்கவும் வளர்க்கவும் விரும்புவோர், நமது மூதாதையர் எழுதி வைத்துவிட்டுப் போன விஷயங்களைக் கொஞ்சம் படித்துப்பார்க்க வேண்டும்.

'பெரியோரை வியத்தலும் இலமே.

சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.'

என்ன சமநிலை பாருங்கள்! பெரியோரைப் புகழ்வதும் இல்லையாம்; சிறியோரை இகழுவதும் இல்லையாம். 'நானும் ஒரு ஜீவாத்மா. இவ் வுலகம் ஏனைய ஜீவர்த்மாக்களால் நிறைந்திருக்கிறது' என்ற சமத்துவ நோக்கு; அன்பு நோக்கு.

இன்றைய மனோதத்துவ அறிஞர்கள் என்ன கூறுகிறார்கள்? எதையும் வெற்றிகொள்ளும் முதல்படி அதைப் பற்றிய அறிவு, விழிப்புணர்வு Awareness என்கிறார்கள்.

என்ன அந்த விழிப்புணர்வு? "நமது மனம் சமநிலையிலில்லை. • பாதிக்கப்படுகிறது. நம் கட்டுப் பாட்டுக்குள் அது இல்லை" என்ற தெளிவைத்தான் விழிப்புணர்வு என்கிறோம். இதன் விளைவாக, என்ன நேருகிறது என்று கவனிப்போம்.

நமது மனப் பாதிப்புகளை நாம் ஒரு மூன்றாம் மனிதன்போலப் பாரபட்சமில்லாமல் பார்க்கவும், நம் மனத்தை நம் காட்டுப்பாட்டுக்கள் கொண்டு வரவும் இந்த விழிப்புணர்வு உதவுகிறது.

விஷயம் நம் காட்டுப்பாட்டுக்குள் இருக்கிறது. என்றதும், நம்மைப்பற்றி நமக்கே ஒரு பெருமையும் நிறைவும், வெற்றிகாணமுடியும் என்ற நம்பிக்கையும் ஏற்படுகிறது.

நமது ஆழ்மனத்தில் நம்மைப் பற்றிய சில எண்ணங்கள் ஆழமாக வேர்விட்டு நம்பிக்கையாக மாறி இருக்கின்றன. இந்த நம்பிக்கைகள் 'என்னால் முடியாது' என்ற ரீதியில் அமையுமானால் நமக்கு நம்மையே பிடிக்காமல் போகிறது—என்று கூறுகிறார்கள்.

இந்த நம்பிக்கைகள் எப்படி நம் மனத்தில் உருவாகின்றன?

ஒன்று, நமது அனுபவங்களின் விளைவாக, இரண்டாவது, நாம் போற்றும் மனிதர்கள் நம்மைப் பற்றிக் கொண்டிருக்கும் அபிப்பிராயங்களின் விளைவாக.

ஒரு உதாரணத்தை எடுத்துக் கொள்வோம்.

பரீட்சையில் ஒரு மாணவன், இரண்டு முறை தோல்வியுறுகிறான். ஒரு வழக்கறிஞர் எடுத்துக் கொண்ட வழக்குகள், வரிசையாகத் தோல்வியடைகின்றன. ஒரு இளைய மருத்துவர் கவனித்த நோயாளிகள் மாண்டு போகிறார்கள். இதன் விளைவாக, அவர்களுக்குத் தங்கள் திறமையைப்பற்றித் தங்களுக்கே சந்தேகம் வருகிறது.

முதல் அனுபவமும் தொடர்ந்த அனுபவமும் நம்மிடையே விளைவிக்கும் மனமாறுபாடுகள் இவை.

நாம் எப்படி இதை மாற்றலாம்? நாம் நினைப்பதில், நாம் சொல்வதில், நாம் நம்புவதில் சர்வஜாக்கிரதையாக இருக்கவேண்டும். மனம், ஒரு குழந்தைபோல நாம் சொல்வதை உடனே நம்பிவிடுகிறது. ஆகவேதான் நாம் எளிதான விஷயங்களாக எடுத்துக்கொண்டு வெற்றி அனுபவங்களை வாழ்வில் நாம் நிறைக்க முயலவேண்டும். குழந்தைகளுக்கு, எளிதில் வெற்றியடையும் சோதனைகளை, பரீட்சைகளை வைக்கவேண்டும். அடிக்கடி

தயங்காமல் பாராட்ட வேண்டும். வெற்றி அனுபவங்களை அடிக்கடி நினைத்துப் பார்க்குமாறு பழக்கவேண்டும்.

'சேர, சோழ, பாண்டியர் வாழ்ந்த நாடு, ஆண்ட நாடு' என்று ஏன் நம் தலைவர்கள் அடிக்கடி சரித்திரத்தை நமக்கு ஞாபகமூட்டுகிறார்கள்? நம் மூதாதையர்களால் முடிந்தது, நம்மாலும் முடியும் என்று நமக்கு நம்பிக்கை ஏற்படுத்தத்தான்!

# 9

**'கரப்பான்பூச்சி என்ன செய்யும்? பாவம், சின்னப் பிராணி! இந்தச் சின்னப் பிராணியா என்னைக் கடித்துக் குதறிக் கொலை செய்துவிடும்? சே! எதற்காகப் பயப்படுகிறேன்?" என்று சிந்தித்துப் பாருங்கள்...**

நம்மைப்பற்றி நாம் கொண்டிருக்கும் எண்ணங்கள்—மகிழ்ச்சி தருமாறு, நிறைவு தருமாறு இல்லை என்றால், நம் வாழ்வு ஏடாகூடமாக அமையும். உள்ளம் சீராக இயங்காது. உள்ளம் சமநிலையை இழக்கும்போது சித்த பேதம்—மனக்கோளாறு கடைசி நிலையாக அமைகிறது.

நாம் அனைவரும் அந்த நிலைக்குப் போவதில்லை. பெரும்பாலோர் பூரணமான சமநிலைக்கும் பூரணமான சித்தபேத நிலைக்கும் இடையில் வசிக்கிறோம். இந்த நிலையை மாற்றிக் கொஞ்சம் கொஞ்சமாக 'சமநிலை'யை நோக்கி நம் வாழ்வுப் பயணத்தை நாம் அமைக்க வேண்டும்.

நம்மைப்பற்றி நமக்கு ஏற்படும் மகிழ்வு, பெருமை நிறைவு—இவற்றை நோக்கி நாம் செயல்படவேண்டும். இதற்குமுன் 'நம் வசம் என்ன எண்ணங்கள் இருக்கின்றன; அவை எப்படி இயங்குகின்றன; இதன் விளைவாக, எத்தகைய உணர்வு நிலைக்கு நம் உள்ளமும் உடலும் ஆளாகிறது?' என்று சுயதெளிவு பெறவேண்டும்.

ஆழ்மனத்தில் கிடக்கும் நம்மைப்பற்றிய நம் எண்ணங்களை நாம் ஆராயவேண்டும். அப்படி ஆராயும் போது சிறுவயதிலிருந்து நாம் வளர்க்கப்பட்டவிதம் ஒரு பயத்தையோ ஒரு அவநம்பிக்கையையோ விதைத்திருப்பதை உணரலாம். நம் அனுபவங்கள் நமக்குச் சில பாடங்களைப் போதித்துவிட்டு ஆழ்மனத்திலிருந்துகொண்டு சதா நமக்கு நினைவுபடுத்திக் கொண்டிருப்பதை உணரலாம்.

ஒரு கரப்பான்பூச்சி குழந்தைக்கு ஏற்படுத்தும் பயம்... அருவருப்பு...! இது ஒருவகை அனுபவம்!

மாறாக, சோதனைச் சாலையில் கரப்பான் பூச்சியின் அங்க அமைப்புகளை அறுத்துக் காட்டி விளக்கப்படுகிறது. இது இன்னொருவகை அனுபவம்...

இந்த இரண்டு சம்பவங்களிலிருந்து விழிப்புணர்வு, ஒரு விஷயத்தைப் பற்றிய அறிவு—எப்படி பயத்தைப் போக்குகிறது என்பதையும் கவனியுங்கள்.

பழைய அனுபவங்கள் நமக்குப் பயமாகவோ, பாரமாகவோ நம்மை வாழமுடியாதபடி அழுத்தும்போது அதை நாம் நினைவுக்குக் கொண்டுவந்து தர்க்கவாத அறிவுமூலம், நடைமுறை அறிவைக்கொண்டு அதன் தன்மையை மாற்றவேண்டும்.

'கரப்பான் பூச்சி என்ன செய்யும்? பாவம், சின்னப் பிராணி! இந்த சின்னப் பிராணியா என்னைக் கடித்துக்

குத்றிக் கொலை செய்துவிடும்? சே! எதற்காகப் பயப்படு கிறேன்?' என்று சிந்தித்துப் பாருங்கள். நமது மனோ பாவமே மாறியிருப்பதை உணர்வீர்கள். நமது பயம் போயிருப்பதை உணர்வீர்கள்.

இப்படித்தான் சிறுவயதிலேற்பட்ட அனுபவங்களை, மெல்லவும் அசை போடவும் நாம் கற்றுக்கொள்ள வேண்டும்.

'அப்பா என்னைச் சின்ன வயதில் என்ன சொன்னார்?' 'ஊர் சுத்துவே, உருப்படமாட்டே' என்றார். பாடம் படிக்காமல் சின்ன வயதில் விளையாடப் போய்விட்டேன். 'ஐயோ! எங்கே, பிள்ளை படிக்காமல் போய்விடுவானோ' என்ற அச்சத்தில் கோபப்பட்டிருக் கிறார்.

'மற்றபடி நான் உருப்படாதவனா? இல்லை! இல்லை! அவர் என்னைச் சொல்லவில்லை; தன் கவலையைச் சொல்லி இருக்கிறார். அவர்மீது எனக்கென்ன கோபம்? என்னால் முடியும். எதையும் எளிதில் சமாளிப்பேன். இப்போது பார்த்தாரானால் எவ்வளவு சந்தோஷப் படுவார்!'

—இப்படி நாம் சிந்திக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

இள வயது சம்பவங்கள், அனுபவம் ஆழப் பதித் திருக்கும் நினைவுகள்—இவற்றை மெல்லமெல்ல எடுத்து அவற்றுடன் நாம் பேச வேண்டும், வாதிடவேண்டும். அவற்றைப் பார்த்துச் சிரிக்க வேண்டும். கெட்ட அனுபவங்களாயிருந்தால் 'அவன் நானல்ல' என நாம் மேலே நிற்கவேண்டும். அவற்றை அப்புறப்படுத்த வேண்டும். நம்மைப் பாதிக்காத—நம்முள் உணர்வுகளை எழுப்பாத—சத்தற்ற சம்பவங்களாக அவற்றை நாம் கருதி மாற்றவேண்டும்.

பொதுவாக, பல மன சிகிச்சை நிபுணர்கள் இதைத் தான் செய்கிறார்கள். பழைய பாதிப்புகளைக் கெல்லி எடுக்கிறார்கள்.

நமது பழைய அனுபவங்களையும், இள வயது சம்பவங்களையும் தவிர, சில சமயம் பிறரது பேச்சு சுடுசொல், பிறரது யோசனை—இவை நம் ஆழ்மனத்தில் புகுந்து நம் வாழ்வை ஆட்டுவிக்கிறது. நம்மைப்பற்றி நாம் கொண்டுள்ள எண்ணங்களுக்கும் நம்பிக்கைக்கும் காரணமாயிருக்கிறது.

ஒரு உதாரணத்தைப் பார்ப்போம்.

இடம் மருத்துவமனை. நோயாளி வலியுடன் கோப மாகப் பேசுகிறார். "எங்கேம்மா நீ நர்ஸுக்குப் படிச்சே? இப்படியா நோயாளிகளை நடத்தறது? நான் சொல்றதை எதாவது காதிலே வாங்கிக்கிட்டு மருந்து கொடுக்கறியா?"

நோயாளியின் பேச்சை அந்த நர்ஸ் லட்சியம் செய்வ தில்லை. ஆனால், டாக்டர் "என்னம்மா செய்திருக்கிறே? இப்படித்தானா உனக்கு டிரெயினிங் கொடுத்தாங்க?" என்று கேட்டால் 'சுருக்' கென்கிறது. குற்ற உணர்வு எழுகிறது. 'நர்ஸுக்கு வேண்டிய பூரண தகுதியும் நமக்கில்லையோ?' என்ற ஒரு சந்தேகம் எழுகிறது.

"நீ ஒரு முட்டாள்" என்று பக்கத்து மாணவன் சொல்வதற்கும், ஆசிரியர் சொல்வதற்கும் வித்தியாசம் இருக்கிறது.

அதாவது, வாழ்வில் யாரை நாம் பெரிதும் மதிக்கிறோமோ, உயர்வாக எண்ணுகிறோமோ அவர்கள் கூறும் சொற்கள் நம் மனத்தின் நிரந்தர எண்ணங்களாக —நம்பிக்கைகளாக மாறுகின்றன.

ஆகவே, நாம் மதிப்பவர்கள், நம்மை மதிக்கும் வகையிலும் மாறவேண்டும். நம் சொல்லாலும் செயலாலும் உயர்வதன் மூலம் நல்ல நம்பிக்கைகளை நாம் நம் ஆழ்மனத்தில் நிலவ விடலாம்.

'நல்ல புத்திசாலி' என்று நினைக்கும்போது அப்படியே ஆகிறோம். 'என்னால் எதையும் சாதிக்க முடியும்' என்று நம்பும்போது, எடுத்த காரியத்தில் வெற்றி காண்பது சாத்தியம்.

இதுவன்றி வாழ்வில் பிறரைப் பார்த்து நம் வாழ்வை நாம் சரிசெய்து கொள்கிறோம். சிலரது தோற்றம், கம்பீரம், கண்ணியம், பேச்சு நடையுடை பாவனை நம்மைக் கவர்கிறது. பிறரது குணங்களைக் காணும்போது நமக்கேற்படும் அதிசயம், 'அப்படி நாம் ஆகவேண்டும்' என்ற அவாவாக மாறும்போது நம்முள் பல மாற்றங்கள் நிகழ்கின்றன.

எது நிஜம், எது நிரந்தரம், எது பொய், எது தோற்றம் என்று நாம் உணரும்போது நமது நம்பிக்கைகள் மாறுகின்றன அல்லது வலுவடைகின்றன. இந்த உலக அனுபவம் நம்முள் ஓர் பழகுந்தன்மையை உருவாக்குகிறது. நமது பழகுந்தன்மை நம்மை யார் என்று உலகுக்கு புலப்படுத்துகிறது.

1980-ல் ஜான்சன் என்ற மனோதத்துவப் பேராசிரியர் சில ஆராய்ச்சிகளை நடத்தினார். அவர் கூறுகிறார்; "பரஸ்பர உறவுகளை நாம் எப்படி வளர்க்கிறோம். எப்படிப் போற்றிப் பாதுகாக்கிறோம் என்பதில்தான் நமது மன ஆரோக்கியம் வெளிப்படுகிறது."

நல்லுறவுகளைத் தனக்குள் வளர்க்க முடியாதவர்கள் தவிப்பு, சோகம், மன உளைச்சல் என்ற உணர்வுகளுக்கு

ஆளாகிறார்கள். நல்லுறவுகளைப் பிறருடனும் சமுதாயத்துடனும் வளர்க்க முடியாதவர்கள் தாழ்வு மனப்பான்மை, வஞ்சம், ஆணவம், காமவெறி என்ற அளவில் இறங்குகிறார்கள்.

## 10

**'நான் சொன்னபடி செய்' என்று கணவன் அதட்டுகிறான். 'நான் சொல்வதைக் கேள்' என்று பெற்றோர் கண்டிக்கிறார்கள். 'என் கொள்கைதான் சரி!' என்று வாதிடுகிறான் கட்சிக்காரன். 'என் மதக் கொள்கைகளில்தான் உண்மை இருக்கிறது!' என்கிறான் மதப்பற்றுடையவன்.**

மனித உறவுகளின் இனிமை வாழ்வில் மகிழ்ச்சியைக் கூட்டுகிறது. வாழ்வை அர்த்தமுள்ளதாக்குகிறது. 'என் குழந்தைக்காக உயிர் வாழ்கிறேன். என் காதலிக்காக எதையும் செய்வேன். என் தங்கைக்காக இந்தத் தியாகத்தை மேற்கொண்டேன். 'என்னை வளர்த்த பெற்றோருக்காகக் கட்டுப்பட்டேன்' என்று மக்கள் தினந்தோறும் பேசுவதைக் காண்கிறோம்.

அவர்களெல்லாம் தியாக உணர்வால்—தன்னை மீறியவர்களாக—நமக்குப் படுகிறார்கள். எது அவர்களை அப்படிப் பேசச் செய்கிறது என்பதைக் கொஞ்சம் சிந்தியுங்கள். அன்பின் கனத்தை உணர்வீர்கள்.

உலகம் பூராவும் தங்கள் கொள்கைகளைப் பரப்பிய புத்தர்பிரானையும், ஏசுவையும், சங்கரரையும் ஒருகணம் எண்ணிப் பாருங்கள். எப்படித் தங்கள் கொள்கைகளை அவர்கள் மக்களிடையே பரப்பினார்கள்? அன்பால் பரப்பினார்கள்; உண்மையின் தெறிப்பால் அந்த விதைகள் உலகெங்கும்போய் விழுந்து பிடிப்புக் கொண்டன.

அந்த மகான்கள்—அறிஞர்கள்—போய்விட்ட பின்னும் எது நம்மைத் தொட்டுக் கொண்டிருக்கிறது?

அவர்கள் உபதேசித்த சொற்கள்; அந்தச் சொற்களில் உள்ள அன்பு; அந்தச் சொற்களில் நிற்கும் ஜீவன். அவை தான் பகவத் கீதையிலும். பைபிளிலும், தம்மபதத்திலும் இன்றும் நின்று நம்முடன் பேசிக்கொண்டிருக்கின்றன. சொற்களின்மூலம் உறவுகளை அவர்கள் வளர்த்தார்கள்.

மனித உறவுகளின் பிணைப்பு எங்கே சிக்கலாகிறது. எங்கே நெருடலாக மாறுகிறது, மனஸ்தாபமாகத் துவங்குகிறது என்று பார்த்தோமானால் அவை எல்லாம் அனேகமாக 'தான் என்ற முனை'ப்பில் முளைவிடுவதைக் காணலாம். 'நான் சொன்னபடி செய்' என்று கணவன் அதட்டுகிறான். 'நான் சொல்வதைக் கேள்' என்று பெற்றோர் கண்டிக்கிறார்கள். 'என் கொள்கைதான் சரி!' என்று வாதிடுகிறான் கட்சிக்காரன். 'என் மதக்கொள்கைகளில் தான் உண்மை இருக்கிறது!' என்கிறான் மதப் பற்றுடையவன்.

•

தான் என்ற முனைப்பு நமது உறவுகளின் சம நிலையைப் பாதிக்கிறது. நாம் எல்லோரும் சமம் என்ற உணர்வு நமது உறவுகளின் சமநிலையை வளர்க்கிறது.

இவற்றையெல்லாம் ஆராய்ந்த மனோதத்துவ அறிஞர்கள், மனித உறவுகளில் எழும் சிக்கல்களைப் போக்கும் ஒரு சுலபமான வழியைக் கண்டுபிடித்தார்கள். இதுதான் உறவு முக்கோணம்.

ஒரு முக்கோண வலையைக் கற்பனை செய்யுங்கள். இந்த வலையின் ஒவ்வொரு கோணத்தின் நுனியையும் ஒரு மரத்தில் கட்டி இருப்பதாகப் பாவனை செய்யுங்கள்.

இந்த முக்கோண வலையின் ஒவ்வொரு கோணத்துக்கும் ஒரு பெயரிடுங்கள். ஒன்றின் பெயர் அன்பு; மற்றொன்றின் பெயர் உண்மை; மூன்றாவதன் பெயர் கருத்துப் பரிமாற்றம். இதையே ஆங்கிலத்தில் **Affinity, Reality, Communication** என்று கூறுகிறார்கள்.

இந்த மூன்றும் வலுவாக ஒன்றை ஒன்று பிணைத்து நிற்கும்போது பிரச்னைகள் எல்லாம் சுமுகமாகத் தீர்க்கப் படுகின்றன. இந்த உறவு முக்கோணம் எப்படிச் செயல் படுகிறது என்று பார்க்கலாம்.

மகன் தந்தையிடம் கூறுகிறான்: "அப்பா, கல்லூரி யில் படிக்கும் அந்தப் பெண்ணை எனக்குப் பிடித்திருக் கிறது. கல்யாணம் செய்து கொள்வதென்றால் அவளைத் தான்...!" தந்தை கூறுகிறார்: "இதோ பார்! அப்படி ஏதாவது செய்தால் இந்த வீட்டு வாசற்படியை மிதிக்காதே!" இப்படி ஆணவத்தை முன் வைத்து அன்பை மறந்து தனது குழந்தைகளின் குடும்பத்தை அகற்றி வைத்து அல்லல்படுவோர் இருக்கிறார்கள். அம்மா சொல்லுகிறாள் "என்னடா இது! அவர்கள் சாதி என்ன? நமது சாதி என்ன? அது எப்படி அங்கு போய்ப் பெண் எடுக்க முடியும்? உனக்குப் புத்தி இருக்கா?" அம்மா அதிகம் படித்ததில்லை. 'எந்த சாதியும் மனித சாதிதான்' என்ற உலக அடிப்படை உண்மைகளின் மூலத்தை அவர் அறிந்ததில்லை.

இதன் விளைவாக, அப்பாவும் அம்மாவும் பைய னுடன் பேசுவதில்லை. "இதோ எடுத்து வைத்திருக் கிறேன், சாப்பிட்டுவிட்டுப் போ?" என்று அம்மா சாதத்தைத் தட்டில் கொட்டிவிட்டுச் செல்கிறார். அப்பா ஒரு நல்ல வார்த்தைகூடச் சொல்லாமல்

அலுவலகம் செல்கிறார். இதனால் மகன், தன் எண்ணத்தில் மேலும் தீவிரமடைகிறான். இந்த மூவருக்கும் இடையே இருந்த ஒரே ஒரு தொடர்—கருத்துப் பரிமாற்றம்—எண்ணப் பரிமாற்றம்—பேச்சு—விடுபட்டுப் போக, அவரவர்கள் வழியே சரி என்று எண்ணி அதிலே ஊறிப் போகிறார்கள்.

பேசாமலிருந்து தண்டிப்பதுதான் சரியான வழி என்று பெற்றோர் தீர்மானிக்கின்றனர். இவர்களுடன் பேசுவதில் பயனில்லை என்று மகன் தீர்மானிக்கிறான். பெற்றோருக்குத் தன்மீது அன்பில்லை என்று நினைக்கிறான் மகன். மகனுக்குத் தங்களிடம் பிரியமில்லை என்று எண்ணுகிறார்கள் பெற்றோர்.

அன்பு, உலக நிலவரம் (உண்மை), கருத்துப் பரிமாற்றம் என்ற மூன்றும் எப்படிச் செயல்படுகின்றன என்பதைக் கவனியுங்கள். உறவு முக்கோணத்தை உணர்ந்தவர்கள் என்ன செய்கிறார்கள்?

என்ன இருந்தாலும், ''அவன் நம் மகன். அவனது நன்மைதான் நமது நன்மை'' என்று பெற்றோர் அன்பால் கட்டுப்படுகிறார்கள். ''உலகம் மாறிக் கொண்டிருக்கிறது. கீழ் சாதியாவது மேல் சாதியாவது! அவன் யாருடனாவது சந்தோஷமாக இருந்தால் சரிதான்!'' என்று உலக நிலவரத்தின் உண்மையை உணர்கிறார்கள். ''இதோ பாருங்க! அறியாத பிள்ளை அது. கொஞ்சம் அதோட பேசுங்க. என்ன விஷயம், யாரு பொண்ணுன்னு தெரிஞ்சுக்குவோம். நல்லது கெட்டது எடுத்துச் சொல்லுங்க!'' என்கிறார் தாய். கருத்துப் பரிமாற்றம் சிக்கல்களை அவிழ்க்கிறது. அன்புடன் கூறப்படும் உண்மைக் கருத்துக்கள், மகனின் எண்ணத்தை மாற்றவும் செய்யலாம்.

ஆழ்ந்து பாக்குமிடத்து நமது சிக்கல்கள் பல, நமது பூரண ஈடுபாடின்மையால் விளைகிறது என்பதை உணரலாம். நமக்குப் பூரண அன்பு இருக்கும்போது பரஸ்பர நல்லெண்ணம் நிலவும்போது நாம் ஒரு சமாதானத்துக்கு ஒரு நல்ல வழிக்கு எளிதாகக் கட்டுப் படுகிறோம்.

இரண்டாவதாக, பிரச்னைகளின் மூலகாரணம்: இருதரப்பாரும் உலக நிலவரங்களைப் பற்றி...உண்மை களைப் பற்றி—மாறுபட்ட அபிப்பிராயம் கொண் டிருப்பது. நமக்கு ஒருவிதமாகவும் மற்றவருக்கு வேறு விதமாகவும் பிரச்னைகள் தோற்றமளிப்பதால்தான் மக்களிடையேயும் நாடுகளிடையேயும் பிரிவும், போரும் துவங்குகின்றன. பிறர் மனோபாவத்தை—பிறர் கண்ணோட்டத்தை—பிறருடைய நிலையிலிருந்து புரிந்து கொள்ளும்போது பரஸ்பரம் இருவரும் ஒரு நடுநிலையை நோக்கி நகர்கிறோம்.

மூன்றாவதாக, கருத்துப் பரிமாற்றம், மனம் விட்டுப் பேசுவது—நமது பயங்களையும் சந்தேகங்களை யும் வெளிக்கொணர்ந்து தெளிவுபடுத்துகிறது. அமெரிக்க (காங்கிரசின்) சட்டசபையின் தலைவராகப் பலகாலம் பணிபுரிந்தபோது லிண்டன் ஜான்சன் எதிர்க்கட்சிக் காரரிடம் பேசும்போதெல்லாம் "நாம் காரணங்களை ஆராய்வோம்!" என்றுதான் பேச்சைத் துவங்குவார். மூலகாரணங்களை ஆராய ஆராய—பரஸ்பர நல்லெண்ணம் நிலவும்போது நமக்குப் பயம் விட்டுப் போகிறது. பிறர் கூற்றை நம்புகிறோம். ஏற்றுக்கொள் கிறோம். இருபாலாருக்கும் ஏற்ற ஒரு நல்ல வழி புலப் படுகிறது.

# 11

## 'அறிவு என்பது அறிந்ததைப் பயன்படுத்துவதில்தான் இருக்கிறது'

அன்பு, உண்மை நிலவரம், கருத்துப் பரிமாற்றம் என்ற இந்த மூன்றையும் எந்தப் பிரச்னையிலும் பொருத்தி நாம் ஒரு முடிவு காணலாம்; மனித உறவில் வெற்றி காணலாம்; இனிமை காணலாம்.

உண்மையான அன்பிருக்கும்போது நம்மிடையே உயர்வு தாழ்வில்லை. பரஸ்பர அன்பு ஏற்படும்போது ஒருவருக்கொருவர் இசைந்து கொடுக்கிறோம். மனம் விட்டுப் பேசுவது நிலையினைப் புரிந்துகொள்ள உதவு கிறது.

மகாத்மா காந்தியைப் பற்றி எரிக் எரிக்சன் என்ற ஹார்வர்டு பல்கலைக்கழக, மனோதத்துவப் பேராசிரியர் எழுதுகிறார் : குஜராத்தில் சம்பராணில் நிகழ்ந்த நெசவாலைகளின் கதவடைப்புதான் மகாத்மா காந்திக்கு ஒத்துழையாமை இயக்கத்தின் வலிமையை உணர்த் தியது. அதுதான் அவர் வாழ்வுப்போக்கைத் திசை திருப்பியது. எல்லாவற்றுக்கும் மேலாக அங்கேதான் ஒரு பெரிய உண்மையை அவர் கண்டார்; வாழ்வில் கடைபிடிக்கத் துவங்கினார். நெசவாலை முதலாளி களுக்கும் தொழிலாளிகளுக்கும் ஏற்பட்ட கதவடைப் பில் ஒரு புதிய வழியைக் கண்டார் காந்திஜி. பேச்சின் மூலம் ஓர் உடன்பாடு காணும்போது, தன்னையும் உயர்த்தி எதிரியையும் உயர்த்தி ஒரு சமரசத்துக்கு வரும் ஓர் உயர் வழியைக் காந்திஜி கண்டுபிடித்தார்.

எதிரிகளாக இருந்தவர்கள் முடிவில் நண்பர்களாக மாறுகிறார்கள்—ஒருவரையொருவர் மேலும் நன்கு

புரிந்துகொள்கிறார்கள்; மதிக்கிறார்கள். தென்னாப்பிரிக்காவில் ஸ்மட்ஸ் துரைக்கு எதிராகக் காந்திஜி போராடியபோதும் அவரை அந்தத் தென்னாப்பிரிக்கத் தலைவர் ஸ்மட்ஸ் போற்றினாரேயொழிய தூற்றவில்லை. அதேபோல், பிரிட்டிஷாரிடமிருந்து விடுதலை பெற்ற போதும் இந்திய மக்களாகிய நாம் அவர்களது நண்பர்களாகத்தான் பிரிந்தோம். இதிலிருந்து மகாத்மா காந்தியின் அடிப்படைத் தத்துவத்தைப் புரிந்து கொள்ளமுடியும்.

"அவர் ஒரு பெரிய தலைவர், மகான், தெய்வப் பிறவி" என்று நாம் கொண்டாடுகிறோமே தவிர அவர் என்ன செய்தார், எப்படிச் செய்தார். அதை நாம் நம் வாழ்வில்—நாட்டு வாழ்வில்—கடைப்பிடிக்க முடியுமா என்பதிலெல்லாம் பொதுமக்களும் சரி, தலைவர்களும் சரி; அக்கறை செலுத்தக் காணோம்.

அறிவு என்பது அறிந்ததைப் பயன்படுத்துவதில் தான் இருக்கிறது.

இள உள்ளங்கள் எப்போதுமே ல்ட்சியத்தை நாடும் மனோபாவம் கொண்டவை. நியாயத்துக்காகவும் உண்மைக்காகவும் போராடும் உள்ளம் கொண்டவை. அவை காந்திஜியின் அடிப்படைத் தத்துவங்களைப் புரிந்துகொண்டு நடக்குமானால் ஒரு நல்ல சமுதாயம் உருவாகும்.

இந்த முக்கோண வலையை மீண்டும் கவனிப்போம்.

அரசியலில் ஒரு கட்சிக்காரர் எதிர்க் கட்சியைச் சாடுகிறார் என்று வைத்துக்கொள்ளுங்கள். இங்கே அன்பு, உண்மை நிலவரம், கருத்துப் பரிமாற்றம் என்ற மூன்றும் எப்படிச் செயல்படுகிறது என்பதைக் கவனியுங்கள்.

அரசியல்வாதி சாடுகிறார்—பேச்சிருக்கிறது. ஆனால் கருத்துப் பரிமாற்றம் இல்லை. எதிர்க்கட்சிக்கு அவகாசம் கொடுத்து விஷயங்களை வாங்கிக்கொள்வதில்லை. அடுத்து, உண்மை நிலவரத்தை உணர்வதில்லை. குறைகள் உள்ளன என்று ஏற்றுக்கொண்டால் அது கொள்கைப் பலவீனம் என்று எண்ணப் பழக்கிக் கொண்டிருப்பவர்கள் இவர்கள். மூன்றாவதாக, எதிர்க் கட்சிமீது—எதிர்க் கட்சிக்காரர்கள்மீது—பரஸ்பரம் நல்லெண்ணம், அன்பு இருப்பதில்லை இவர்களுக்கு. அவர்களும் மனிதர்கள்தான் என்பதையோ, அவர்களும் ஆட்சியிலிருந்தவர்கள்தான் என்பதையோ இவர்கள் ஏற்றுக்கொள்வதில்லை. இதன் விளைவாக, அரசியல்வாதிகளின் பேச்சில் ஒரு தான் தோன்றித்தனத்தை—அகம்பாவத்தைக் காண்கிறோம். சமநிலை தவறிய ஒரு போக்கைக் காண்கிறோம். அதன் விளைவுகளை நாடும் மக்களும் அனுபவிக்கிறார்கள்.

ஆசிரியர்கள் போராட்டம் மலையென உருவெடுத்தது. மாநில முதல்வரைப் பார்த்துப் பேசவேண்டும் என்றார்கள் ஆசிரியத் தலைவர்கள். மாநில முதல்வரோ பேச மறுக்கிறார். இதன் விளைவாக, மனித உறவுகளின் பேதங்கள் எப்படி நாட்டின் விளைவுகளாக மாறுகின்றன என்பதைக் கவனியுங்கள். பின், மாநில முதல்வர் அவர்களுடன் பேச இசைகிறார். எல்லாம் இனிதாக சுமுகமாக முடிகிறது!

‘பிறர் சொல்வதைக் காது கொடுத்துக் கேட்டாலே அரைவாசிக் குறைகள் மறைந்துவிடும்’ என்பார்கள் மன சிகிச்சை நிபுணர்கள். குடும்பத் தகராறுகளிலிருந்து, முதலாளி—தொழிலாளி பிரச்னையிலிருந்து நாட்டுப் பிரச்னைகள்வரை இந்த உண்மை பொருந்தும்.

மேலும் முக்கியமான ஒன்றை மனோதத்துவ அறிஞர்கள் கூறுகிறார்கள். இந்த முக்கோண வலையில் ஏதாவது ஒரு கோணத்தை நீங்கள் பிடித்துக் கொண்டால், அதன்மூலம் மெதுவாக மற்ற இரண்டையும் பிடித்துவிடலாம் என்பதுதான் அது.

உதாரணமாக, நீங்கள் மனம்விட்டுப் பேச இசைந்தீர்களானால் பிறர் நோக்கைப் புரிந்துகொள்ள முடியும். அவர்களிடமும் அவர்கள் கொள்கையிடமும் நாம் அன்பு காட்டத் துவங்குவோம்.

அதேபோல, நம்மிடம் அன்பும் நல்லெண்ணமும் மேவும்போது பிறருடன் பேச இசைகிறோம்; பிறர் நோக்கை—உலக நிலவரத்தைப் புரிந்துகொள்ளப் பாடுபடுகிறோம்.

அந்த ரீதியிலே, நாம் உலக நிலவரத்தைப் பிறர் கண்கள்மூலம் பார்க்கத் தயாராகும்போது பிறர் நோக்கில் நமக்கு அனுதாபம்—அன்பு பிறக்கிறது. பிறர் நோக்கில் விஷயங்களைக் காணும்போது, நாம் அவர்களிடம் நம் கருத்தைச் சொல்லிக் கருத்துப் பரிமாற்றம் செய்யத் தயங்குவதில்லை.

வலையின் ஒரு நுனியிலிருந்துதான் ஒரு கிளையில் உட்கார்ந்திருக்கும் சிலந்தி முழு வலையையும் பின்னுகிறது. ஓர் இனிய முக்கோண வலையை நாம் நமக்கும் பிறருக்குமாகப் பின்ன முடியும். ஒரு சுமுகமான மனித உறவை நம்மைச் சுற்றித் தழைக்கச் செய்ய முடியும்.

# 12

**'திருமணத்துக்கு முன் ஒரு பெண்ணுக்கு ஏற்பட்ட பழைய உறவுகள் யாருக்கும் எதிராகச் செய்யப்பட்டதல்ல. இதைப் பற்றிக் கணவன் தெரிந்துகொள்ள வேண்டியதில்லை.'**

தனி மனித வாழ்வில் வெற்றிக்குக் காரணமாக இருப்பவை, இரண்டு முக்கியமான விஷயங்கள்.

ஒன்று: வேலை உழைப்பு.

இரண்டாவது: எல்லோருடனும் சுமுகமாகப் பழகுவது.

உழைப்பும் சுமுகமான உறவும்தான் மனித வாழ்வின் வெற்றிக்கும் நிறைவுக்கும் காரணமாயிருக்கின்றன. இது உண்மைதானா என்று உலக இயல்புகளையும், உலக நிலவரங்களையும், நமது சொந்த வாழ்க்கைச் சம்பவங் களையும் நாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

உழைப்பு தரும் மகிழ்வையும் நிறைவையும் பற்றி ஸ்டார்க்கெல் என்ற அமெரிக்கர் ஓர் அரிய நூலை எழுதி யிருக்கிறார்.

மனித உறவுகளைப்பற்றி இன்று ஏராளமான சமுதாய இயல் பேராசிரியர்கள், பல பல்கலைக்கழகங் களில் ஆராய்ந்து வருகின்றனர். கிட்டத்தட்ட இவை அனைத்தும் இன்று அறிஞர்களிடையேயும் பல்கலைக் கழகப் படிப்பாளர்க்கிடையேயும் மட்டுமே நிற்கிறது, இது சமுதாயத்தின் எல்லா மட்டங்களிலும் பரவும்போது உறவு இனிமையைப் பரப்பும்.

சுமுகமாகப் பழகும் மனிதத் தன்மைகளை நான்கு வகையாகப் பிரித்திருக்கிறார்கள்.

1. பிறரது அறிமுகம்-நட்பு-உறவு. ஒருவரையொரு வர் நம்புதல். இந்தப் பரஸ்பர நம்பிக்கை-நம் உறவுக்கு, வலிமை தருகிறது.

2. நமது பேச்சு மூலமும், சம்பாஷணை மூலமும் கருத்துப் பரிமாற்றங்களின் மூலமும் நம் உறவு பலப் படுகிறது. நம்மால் எவ்வளவுக்கெவ்வளவு தெளிவாகவும் குழப்பமில்லாமலும் நம் எண்ணங்களைத் தெரிவிக்க முடிகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு உறவின் தன்மை அமைகிறது.

3. அடுத்த கட்டமாக, பிரச்னைகள் என்று வரும் போது, நமது பரஸ்பர ஆதரவும் துணையும் உறவுகளின் பிணைப்பை உறுதியாக்குகிறது. உறவுக்கு நாம் ஆதரவு கொடுக்கவேண்டும் கைகொடுக்க வேண்டும்.

4. பிரச்னைகள் இல்லாத உறவுகளில்லை. எவ்வளவு நெருக்கமாக நட்புக்கொண்டிருந்தாலும் சமயத்தில் மனஸ்தாபம் தோன்றுவது இயல்பு. அவற்றை உணர்ந்து பிரச்னைகளுக்கு முடிவுகாண நாம் முயலவேண்டும். பரஸ்பர நம்பிக்கைக்கும் உறவுக்கும் பாதகமேற்படாத வண்ணம் நம் பிரச்சனைகளைப் பேசித் தீர்த்துக்கொள்ள முயலவேண்டும்.

இவைதான் அடிப்படை.

எதன் காரணமாக ஒருவரையொருவர் விரும்பு கிறோம்? ஏன் ஒருவரது நட்பை வளர்க்க ஆசைப்படு கிறோம்? ஒரு கணம் யோசித்துப் பாருங்கள். ஒரு மனிதரைப் பார்க்கும்போது, "இவர் உண்மையானவர், இவரை நம்பலாம்" என்ற நம்பிக்கை ஏற்படுகிறது. அவரது பேச்சு, தோற்றம், சொல்லின் தொனி, நிதானம், அங்க அசைகள் எல்லாம் நம்மிடம் ஓர் உள்ளுணர்வைத் தோற்றுவிக்கின்றன.

மனித உறவு நம்பிக்கையில் துவங்குகிறது. போலி கள்கூட நம்பிக்கையைத்தான் உருவாக்க முயல்கிறார் கள். சாயம் போகாதென்று சத்தியம் செய்யும் புடவைக் கடைக்காரரிலிருந்து, "நான் குடிக்க மாட்டேன். குடி கேடு விளைவிக்கும், மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வருவேன்!" என்று வாக்குறுதி அளிக்கும் அரசியல் தலைவர் வரை நம்மிடையே நம்பிக்கையைத் தோற்று விக்க முயல்கிறார்கள்.

பொது உறவுகளை விட்டுவிட்டு நெருக்கமான உறவுக்கு ஒரு கணம் வாருங்கள். முதன் முறையாக நீங்கள் விரும்பும் பெண்ணையோ, ஆணையோ கண்டு பேசுகிறீர்கள். உடலும் உள்ளமும் ஆத்மார்த்தமாக உங்கள் அன்பைத் தெரிவிக்கும்போதுகூடப் பேச்சின் மூலம்தான் பிறரது நம்பிக்கையைப் பெறமுயல்கிறோம். அதாவது, பிறர் நமது அந்தரங்கங்களில், ஆசைகளில் பங்கு கொள்ள அனுமதிக்கிறோம். நமது பயங்களையும் லட்சியங்களையும் மனம் திறந்து பகிர்ந்து கொள் கிறோம். நமக்குப் பிறரிடமும், பிறருக்கு நம்மிடமும் ஒரு நம்பிக்கை ஏற்படுகிறது. இது ஒரு தொடர்பை ஏற்படுத்துகிறது; ஒரு நிரந்தரத்தைத் தருகிறது; ஒரு புதிய உறவு துவங்குகிறது.

"இவன் உண்மையானவன், சொன்ன வார்த்தை யைக் காப்பாற்றுவான்" என்ற எண்ணம் காதலன் முதல் மேலதிகாரி வரை, அரசியல் தலைவர்கள் வரை நம்மை நம்பவைக்கிறது.

அந்தரங்கங்களைப் பரிமாறிக்கொள்ளும்போது பிறருடன் நெருக்கமாகிறோம். நம் உறவு ஒரு தனித் தன்மையைப் பெறுகிறது.

ஆனால், எல்லா விஷயங்களிலும் நாம் எவ்வளவு தூரம் செல்லலாம் என்பதற்கு ஓர் எல்லை இருக்கிறது. வள்ளுவர் கூறுகிறார்: 'மரக்கிளையின் நுனிக்குப் போகிறவர்கள், அதற்கும் மேலே போக விரும்பினால் உயிருக்கு ஆபத்து ஏற்படும்!' என்று.

ஞானிகள்கூடத் தங்கள் பூர்வாசிரமத்தைக் கூறுவதில்லை. இதை வாசகர்கள் கவனிக்க வேண்டும்; நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும். பிறரது நம்பிக்கையைப் பெற நாம் நம்மைப் பற்றிய எல்லாவற்றையும் குடத்தைக் கவிழ்ப்பது போலக் கொட்ட வேண்டும் என்பதல்ல; கூடாது.

"தவறுகளை ஏற்று மன்னிப்புக் கேட்பது ஆத்மாவைத் தூய்மைப்படுத்தலாம்; ஆனால், அது புகழுக்கும் பேருக்கும் தீங்கு விளைவிப்பதில் முடியும்" என்கிறான் ஓர் அறிஞன்.

ஒரு சமயம் ஒரு பெண் வாசகர் கடிதம் எழுதியிருந்தார். தன் கணவன் நெருக்கமான நேரங்களில் தன்னுடன் வெளிப்படையாகப் பேசுவதாகவும் அப்படியே தானும் பேச வேண்டுமென்று நிர்ப்பந்திப்பதாகவும் தன்னுடைய பழைய உறவுகள் ஆசைகளைச் சொல்லுமாறு கூறுவதாகவும் எழுதியிருந்தார். "நீங்கள் பதிலுக்கு அப்படி எல்லாவற்றையும் கூறுவது உசிதமல்ல. சமயம் வரும்போது உங்கள் கணவன் உங்களுக்கெதிராக இதை உபயோகிக்கக்கூடும்?" என்று விரிவாகப் பதில் எழுதி இருந்தேன்.

ஏன் அப்படி எழுதினேன்...?

திருமணத்துக்கு முன் ஒரு பெண்ணுக்கு ஏற்பட்ட பழைய உறவுகள் யாருக்கும் எதிராகச் செய்யப்பட்டதல்ல. இதைப் பற்றிக் கணவன் தெரிந்துகொள்ள

வேண்டியதில்லை. அமெரிக்கச் சமுதாயம் போல ஆணும் பெண்ணும் மீண்டும் மறுமணம் செய்து கொள்ளும் சகஜ நிலை இருந்தால் யாரும் மற்றவரது பழைய கதைகளைத் தவறாக எடுத்துக்கொள்ள மாட்டார்கள்! நமது சமுதாயம் அப்படி அல்ல!

நம்பிக்கையை ஏற்படுத்தும் கருத்துப் பரிமாற்றம் என்பதற்கும், அந்தரங்கங்களை எல்லாம் கொட்டும் மன வெளிப்பாடுக்குமுள்ள வேறுபாட்டினையும் நன்கு உணரவேண்டும்.

'அந்தரங்கம் ஊமையானது' என்ற தலைப்புக் கொண்ட தமிழ் சினிமா படம் வந்ததாக ஞாபகம். சில அந்தரங்கங்கள் ஊமையாக இருப்பதில் தவறில்லை.

மேலும், எல்லாவற்றையும் கொட்டிவிடும் மனம் கூரையில் பெய்யும் மழைபோல் ஆகுமே தவிர, ஏரியில் நிற்கும் நீராக அமையாது. எண்ணங்களையும், ஆசைகளையும், லட்சியங்களையும் மனதில் தேக்கி வைக்க வேண்டும். அந்த ஏரி நிரப்பி வழிவதுபோல், சில அதிகமானவற்றை மட்டுமே நாம் பரிமாறிக்கொள்ள வேண்டும். அப்போதுதான் மனம் வலிமை பெறும்! ஆனால், மன சிகிச்சை பெறும்போதோ, மருத்துவரிடமோ நமது அந்தரங்க, விரட்டல்களை, கனங்களை சொல்லிக்கொள்வது பிரச்னைக்கு வழிகாண உதவும்.

பரஸ்பர நம்பிக்கை—உறவின் முதற்படி.

# 13

'உதவி தேவைப்படும்போது, நம் தியாக உணர்வினால் மனிதாபிமானத்தால், நட்பினால் உந்தப்பட்டு செய்கிறோமே. அதுதான் உறவுகளை நிலைநிறுத்தும்; வலிமைப்படுத்தும்.'

மனித உறவுகளை வலிமைப்படுத்தும் இரண்டாவது குணம், மனந்திறந்து பேசுதல் — எண்ணப் பரிமாற்றம்—கருத்துப் பரிமாற்றம். ஒருவரையொருவர் அறிந்துகொள்ளும் முயற்சி இது.

பிறரை மதிக்கிறோம்; மரியாதை செய்கிறோம் என்கிற உறவு நம் வாய்வார்த்தை மூலம் மட்டும் தெரிவிக்கப்படுவது அல்ல. நமது முகம், உடலசைவுகள் எல்லாமே நம் விஷயங்களைத் தெரிவிக்கின்றன.

ஒரு சமயம், பங்களூரில் ஒரு வங்கியின் தலைவரை எனக்கு அறிமுகப்படுத்தினார்கள். அவர் தனது 'பிசினஸ் கார்டை' என் கையில் கொடுக்காமல் மேஜை மீது நகர்த்தியதைக் கண்டேன். மனித உறவுகளை வளர்த்து நிறுவனத்தை எப்படி விரிவாக்குவது என்பது பற்றி ஒரு பத்துப் பக்கக் கட்டுரையை அவர் எழுதியிருந்தார்! நான் அவரைப் பார்த்து அனுதாபப்பட்டேன். மனிதர்களைச் சமமாக மதிக்கும் பண்பு போய்விடும் போது உறவு நிர்ணயமாவதில்லை. அதிகாரமும் ஆணவமும்தான் நிர்ணயமாகின்றன.

கௌரவம் என்பது பிறர் கொடுத்து நாம் பெறுவதல்ல. நம்மைப்பற்றி நாமே கொண்டிருக்கும் மரியாதைதான் நம் கௌரவம். பிறர் அதை இடறுகிறார்கள் என்பதால் நாம் தாழ்ந்துவிட மாட்டோம். அதற்காக

அவர்மீது அனுதாபப்பட்டுவிட்டு நாம் காரியத்தைக் கவனிப்பது நல்லது.

இத்தகைய சந்தர்ப்பங்களில், பிச்சை ஏற்கப்போன புத்தரை ஒரு வீட்டுக்காரன் திட்டியதும், ''ஐயா! நீங்கள் கொடுத்த பிச்சையை நான் ஏற்காவிட்டால் பிச்சை உங்களுக்குச் சொந்தம். அதேபோல் உங்கள் திட்டுக்களையும் நான் ஏற்றுக்கொள்ளவில்லை'' என்று சொன்னதும் தான் என் நினைவுக்கு வரும். மதியாத நட்பை இழப்பதில் தவறில்லை. 'மதியாதார் முற்றம் மதித்தொருகாற் சென்று மிதியாமை கோடி பெறும்' என்பது ஔவை வாக்கு.

சமய சந்தர்ப்பங்களால் ஒருவர் உயர் பதவியிலும் மற்றொருவர் கீழ் பதவியிலும் இருக்க நேரிடுகிறது. இது உலக இயல்பு. அவரவர் பணியை அவரவர் சரியாகச் செய்யும்போது நாம் எல்லோரும் சமமானவர்கள்தான். இதை உணராது நடந்துகொள்பவர்கள் உலகின் சமநிலை தத்துவத்துக்கு எதிராகச் செயல்படுகிறார்கள். தெரிந்தோ தெரியாமலோ இதன் விளைவுகளை அனுபவிக்கப் போகிறவர்கள் அவர்கள்.

'வண்டிஒரு நாள் ஓடமேறும்; ஓடமும் ஒருநாள் வண்டியிலேறும்' என்ற உலக இயல்பை நாம் வாழ்வில் கடைப்பிடிக்கும்போதுதான் உறவை ஒரு சமநிலையில் பின்னமுடியும். வலையைப் பெரிதாக்கமுடியும்.

நம் கருத்துக்களைத் தெரிவிப்பது, பிறர் என்ன சொல்கிறார்கள் என்பதைப் புரிந்துகொள்வது இவை நம்மை உறவின் அடுத்தபடிக்கு அழைத்துச் செல்கின்றன.

அலுவலகங்களில், நிர்வாகிகளுக்குச் சொல்லப்படும் முதல்பாடம், 'சொல்வதைத் தெளிவாகச் சொல்லுங்கள்.

பின், என்ன சொன்னீர்கள் என்பதை உங்கள் பணியாளர்களிடமிருந்து, அவர் வாய்மூலம் கேட்டு, சரி பார்த்துக் கொள்ளுங்கள்!' என்பதுதான். இல்லாவிட்டால் அவர் ஒன்று சொல்லியிருப்பார்; நாம் ஒன்றைச் செய்திருப்போம். 'இதுதான் அவர் எண்ணியது' என்று நாம் முடிவெடுத்துச் செய்திருப்போம்.

பள்ளிகளில் பாடங்களை இதற்காகத்தான் விளக்குகிறார்கள். உதாரணங்கள் கொடுக்கிறார்கள். பின் பரீட்சை வைக்கிறார்கள். எதற்காக? ஆசிரியர் என்ன சொன்னார், எதை எதிர்பார்க்கிறார் என்பதைச் சரியாக மாணவர்கள் புரிந்து கொண்டிருக்கிறார்களா என்று பார்க்கத்தான்.

உலகின் போர்களை ஆராய்ந்தவர்கள், உலகின் பல போர்கள் சரியான கருத்துப் பரிமாற்றமின்மையால்தான்—அவநம்பிக்கையால்தான்—துவங்கியிருக்கின்றன என்று கூறுகிறார்கள்.

உங்களுக்கேற்பட்ட சமீபத்திய மனஸ்தாபங்களை எடுத்துக்கொண்டு, அதில் எவ்வளவு தூரம் பரஸ்பரம் மனம்விட்டுப் பேசிக்கொள்ளாத குறை, மனஸ்தாபத்தின் காரணம் என்று அலசிப்பாருங்கள்.

மூன்றாவதாக பிரச்னைகள் வரும்போது நாம் ஒருவருக்கொருவர் ஆதரவு தரவேண்டும். துணைநிற்க வேண்டும். ஒவ்வொருவருடைய வாழ்விலும் இக்கட்டான சம்பவங்கள் வருகின்றன. அந்தச் சமயத்தில் தயங்காது நாம் உதவிக்குப் போகவேண்டும். உதவி செய்யவேண்டும்.

அப்படிச் செய்யாதபோது—'அற்ற குளத்து அறுநீர்ப் பறவைபோல், நம் செயல் ஆகிவிடும்! குளம் வற்றிவிட்டது

என்று பறவைகள் கிளம்பிவிடுமாம். ஆனால் அங்கே வாழும் அல்லிக் கொடிகளோ குளத்துக்குத் துணை நிற்குமாம். உதவி செய்யவேண்டிய நேரத்தில் ஓடுபவர்கள் சந்தர்ப்பவாதிகள்.

துணை நிற்பதுதான் நட்பு.

உதவி தேவைப்படும்போது, நம் தியாக உணர்வினால், மனிதாபிமானத்தால், நட்பினால் உந்தப்பட்டு செய்கிறோமே, அதுதான் உறவுகளை நிலை நிறுத்தும்; வலிமைப்படுத்தும்.

உதவ முடியாதபோது—அதற்கான சக்தி நம்மிடம் இல்லாதபோது குறை கூறாமலாவது இருக்கக் கற்றுக் கொள்ளவேண்டும்.

எனது நண்பர் ஒருவர் கூறிய ஒரு சம்பவம்:

''வடிவேல் எனது உறவுக்காரர்; நெடுநாளாக நட்பு. ஏதாவது அலுவலகத்தில் கஷ்டம் வரும்போது கவலையுடன் அவரிடம் போவேன். எல்லாவற்றையும் கூறுவேன். நண்பர் வடிவேல், எல்லாவற்றையும் கேட்டுவிட்டு என்னையே கண்டிக்கத் துவங்குவார். மனமுடைந்து வீடு திரும்புவேன்.

'ஒரு நான்கு முறை இப்படி நடந்தபின்தான் என்ன நடக்கிறது என்ற ஞானம் எனக்கெட்டியது. வடிவேல், வேல் தரவில்லை—வெந்த புண்ணில் வேல் பாய்ச்சப் பழகி கொண்டவர் என்பதை உணர்ந்தேன். நான் அவரிடம் இப்போதெல்லாம் போவதில்லை. புத்தி கொள்முதல்!''

நம்மால் ஆதரவு காட்ட முடியாதபோது, துணை நிற்க முடியாதபோது, குறைந்தபட்சம் குறை கூறாதீர்கள். அது உறவாகாது. பிறர் சங்கடத்தில் இன்பம் காணும் கொடிய மன நோயாகும் அது.

# 14

**'விதை ஒரு கருத்து அதை மண்ணில் ஊன்றி நீர் வார்த்து முளைக்க வைப்பது நடைமுறை.'**

அடிப்படையில் உண்மை—நாணயம் இல்லாமல் மனித உறவுகளின் லாவகங்களை அறிந்துகொண்டு அதை கடைப்பிடித்து வாழ்வில் வெற்றி பெறமுடியும் என்று யாராவது கருதுவார்களானால், அது வடிகட்டிய முட்டாள்தனமாகும்.

வாழ்க்கையின் அடிப்படைகளான உண்மை, நியாயம் சுதந்திரம், சமத்துவம், நல்லெண்ணம் என்பவை இல்லாது கட்டப்படும் எந்தவாழ்க்கையும் பழுதுபட்ட வாழ்க்கையே. மேற்கூறிய ஐந்துடன், அழகு என்பதையும் கூட்டி (அழகு என்பதை ஓர் ஒழுங்கு, ஓர் அமைப்பு, ஒரு கட்டுப்பாடு என்றும் எடுத்துக்கொள்ளலாம்) உலகை ஆளும் ஆறு பெரிய கருத்துக்களாக இவற்றை மார்ட்டிமர் ஆட்லர் என்ற அறிஞர் எழுதுகிறார்.

வாழ்வை நாம் ஏன் வாழ்கிறோம். எந்த வகைத் தத்துவங்கள் வாழ்வுக்கு அர்த்தமூட்டும், நிறைவூட்டும் என்பதை அறிந்துகொள்வது நல்லது.

காரணம், பலர் மனித உறவுகளில் வல்லவர்களாக, பிறரை நம்ப வைப்பவர்களாக, பேச்சில் வல்லவர்களாக, போலியாக இருப்பதை அலுவலகங்களிலும், குடும்பத்திலும் பொது வாழ்விலும் நாம் காண்கிறோம். மனித உறவுகள் என்ற திரையைக் காட்டி வார்த்தை ஜாலத்தால் உண்மையை மறைக்க முயலக் கூடாது. அப்படிச் செய்வது நிஜவாழ்வாகாது. அது பொம்மலாட்டமாகவே முடியும். மேலும், இவ்வுலகில் நம்மைவிட

புத்திசாலிகள் நிறைய இருக்கிறார்கள் என்பதையும் நாம் உணரவேண்டும். அவர்கள் நமது போலித்தனத் தைக் கண்டுபிடித்து அம்பலப்படுத்தும் காலம் ஒரு நாள் வரும்.

அதேபோல், மனித உறவுகளைக் கையாளுந் திறனால் — தளுக்கினால் — மற்றவர்களை நாம் உபயோகப்படுத்தும் உறவானது நீண்ட நாள் நிலைக்காது. உதாரணம் : செல்வந்தர்களின் சின்ன வீட்டு உறவு. மற்றவர்களது நஷ்டத்தில், கஷ்டத்தில் பிறரைத் தாழ்த்துவதன் மூலம் கட்டப்படும் உறவு நிலை யானதல்ல.

அடிப்படை உண்மைகள் என்பவை நம் வாழ்வை ஒரு பொன்கலமாக மாற்றுகின்றன. மனித உறவுகள் பொன்கலத்துக்கு ஒரு மெருகூட்டுகின்றன; அழகூட்டு கின்றன.

கணவன்—மனைவி, என்பதனால் இருவர் ஏதும் அபிப்ராய பேதமே இல்லாது வாழ்வை நடத்துவார்கள் என்பது கிடையாது.

''என் கணவன் அலுவலக விஷயங்களில் நான் ஈடுபடு வதில்லை. என் தத்துவ விசாரணைகளைப்பற்றி அவர் கவலைப்படுவதில்லை.'' என்கிறார் ஒரு மனைவி. வாழ்க்கைத் தத்துவம் என்ன என்பதை விளக்கப் புகும் மனைவி, முடிவில் கணவனுடன் விவாதத்தில் இறங்கி மனஸ்தாபத்தில் முடிப்பார் என்பதற்கு வாய்ப்பு அதிகம் உண்டு. ''அவள் மனைவிதானே!'' என்று கணவன் தன் உயர்வை நிலைநிறுத்தும் ஆழ்மனப் போராட்டமாய் அது இருக்கலாம். தன் படிப்பை—அறிவைப் பலப் படுத்தித் தன் திறனை நிச்சயப்படுத்திக்கொள்ளும் போராட்டமாக மனைவி அதை எடுத்துக்கொள்ளலாம்,

அவர்களிருவரும் இதன் காரணமாகத்தான், "உன் விஷயத்தில் நான் ஈடுபடுவதில்லை. என் விஷயத்துக்கு நீ வரவேண்டாம்!" என்று முன்னேற்பாடு செய்து கொண்டிருக்கிறார்கள். இதன் காரணமாக பிறர் முன்னிலையில் விவாதம் எழுந்தாலும் அது ஒருமையைப் பிரிப்பதாக இல்லாமல் சிரிப்புடன்—கலகலப்புடன் முடிகிறது.

ஓர் அலுவலக எழுத்தர், பிரச்னையை எப்படிக் கையாளுகிறார் என்பதைக் கவனியுங்கள். மேலதிகாரி ஒன்று சொல்வார். பின் அதையே, தான் அப்படிச் சொல்லவில்லை, என்று கூறி எழுத்தரை வம்புக்கிழுப்பார். அலுவலக எழுத்தர் அவருடன் சமமாக நீங்கள் தான் குற்றவாளி என்று தெள்ளத் தெளியக் கூறிவிட முடியாது...வேறிடத்தில் வேலை நிச்சயமாயிருந்தால் ஒழிய!

ஆகவே, நம் எழுத்தர் என்ன செய்கிறார்? "சார்? நீங்கள் சொல்றதை ஒரு 'மெமோ' மாதிரி போட்டு எழுதிக் குடுத்திடுங்கோ...எனக்கு மறக்காமலிருக்கும்!" என்று எழுதி வாங்கிக்கொள்கிறார்.

பின்னால் மேலதிகாரி அவரைக் குற்றம் சாட்டும் போது, "கொஞ்சம் இருங்கள்! நானும் தப்பு செய்திருக்கலாம். எதற்கும் நீங்கள் கொடுத்த 'மெமோ'வைப் பார்த்துவிடுகிறேன்" என்று அதை அவிழ்த்து வைக்கிறார்.

அதாவது, எழுத்தர் பிரச்னைகளைத் தடுக்க, சமாளிக்க ஓர் ஒப்பந்தத்தை மனிதபிமானத்துடன் செய்து வைத்திருக்கிறார்—இருவருக்கும் ஏற்ற வகையில் இருவரது கௌரவமும் தாழாதவகையில் பரஸ்பர

நன்மையை உத்தேசித்து ஒரு முன் முடிவுக்கு வருகிறார்கள்.

குடும்பத்திலும் சரி, தொழிலும் சரி; இத்தகைய ஒரு முன் உடன்பாடு—மனிதாபிமான நோக்கு நமது நட்பை வளர்க்கும். உறவைத் துண்டிக்காது. 'இதோ பார்! நான் ஒன்றும் எல்லாம் உணர்ந்த ஞானியல்ல, தெரிந்தோ, தெரியாமலோ உன் உள்ளத்தைப் புண்படுத்தக்கூடும். அது வேண்டுமென்று கெட்ட நோக்கத்துடன் செய்யப் பட்டதல்ல என்பதை நினைவில் வைத்துக்கொள்!' என்று மனைவியிடம் சொல்லும் கணவன்—தொழில் துவங்குமுன் "நான் உன்னை மனமறிந்து ஏமாற்றமாட்டேன். பிரிய நேரிட்டால் ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்து நண்பராகப் பிரிவோம்" என்று உடன்பாடு செய்துகொள்ளும் பங்குதாரர்—இவர்கள் வாழ்க்கை எளிதாக அமைகிறது.
"நமக்கு நட்புதான் முக்கியம். அதை முன்வைத்து நாம் அனுசரித்துப் போவோம்" என்று இரு கட்சிகள் முன்வரும்போது உடன்பாடு ஏற்படுகிறது. மேலும், வலிமை கொண்ட மனிதர்களை, உறவு உருவாக்குகிறது.

விஷயங்களை நாம் அறிந்துகொள்வது வேறு. பயன் பெற அவற்றை வாழ்வில் பயில்வது வேறு. உறவுகள் பயில வேண்டியவை கடவுள் என்பது ஒரு கருத்து. பிரார்த்தனை தியானம் என்பது நடைமுறை,

விதை ஒரு கருத்து. அதை மண்ணில் ஊன்றி நீர் வார்த்து முளைக்க வைப்பது நடைமுறை.

நடைமுறைதான் பலன் தரும். பலன் பெற—விஷயங்களை நாம் வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டும். நாம் அறிந்த உண்மைகளை அவ்வப்போது வாழ்வில் கடைப்பிடிக்காதவரை குணங்கள் நம்முடையதாகாது.

# 15

'நமது வாழ்க்கை நெறிகளுக்கு ஈடுபட்டு வராத நட்பு நல்லதல்ல, குழிபறித்துக் கீழே தள்ளும் குதிரை அது.''

தரமான உறவு நிலவும்போது நம்பி, உரிமையுடன் நாம் செயல்படுகிறோம்.

உறவின் தன்மை சமயத்துக்கு தகுந்தாற்போல்—சந்தர்ப்பத்துக்கேற்ப—ஒவ்வொரு முறையும் நிர்ணயிக்கப்படுமானால் உறவு வலிமையற்றதாக, பலவீனம் கொண்டதாக—முறிவுக்குக் காரணமாக அமைகிறது.

துரியோதனின் மனைவியுடன் கர்ணன் சதுரங்கம் விளையாடிக்கொண்டிருக்கிறான். தன் கணவன் வருவதைக் கண்டு எழுகிறாள் துரியோதனின் மனைவி. இதைஉணராத கர்ணன் விளையாட்டை முடித்துவிட்டு செல்லுமாறு அவளை இழுக்கிறான். அவளது மேகலையிலிருந்து முத்துக்கள் சிதறி விழுகின்றன. உள்ளே நுழைந்த துரியோதனன், ''எடுக்கவோ, கோக்கவோ?'' என்கிறான்.

உறவில் தரத்துக்கு உதாரணம் இது.

வேறோர் காட்சியைக் காணலாம்.

பூம்புகார் நகர். கடற்கரை. கோவலனும் மாதவியும் கடற்காற்றின் இதத்தில் சுகானுபவத்தில் பாடி மகிழ்ந்து பொழுது போக்குகின்றனர். மாதவி ஊடலாக வேறோர் பொருள் கொள்ளும்படியான பாடலைப் பாடுகிறாள். 'இவள் பரத்தை. வேறு யார் மீதோ இவளுக்கு நோக்கம் இருக்கிறது' என்று சந்தேகங் கொண்டு கோவலன் பிரிகிறான்.

இது, சந்தேகம்—அவநம்பிக்கை—என்ற சிறு நூலில் ஊசலாடும் உறவு.

நமது உறவுகளின் தரமும் தன்மையும் எந்தக் குணங்களால் நிர்ணயிக்கப்படுகின்றன என்பதைச் சமுதாய இயல் அறிஞர்கள் ஆராய்ந்திருக்கிறார்கள்.

கருத்து வேறுபாடு—கொள்கை வேறுபாடு—உறவுகளுக்கு ஊட்டம் தருகிறது அல்லது தடையாயிருக்கிறது என்று விளக்குகிறார்கள். ஒரு மனிதர் வேறு கட்சியை, மதத்தை, அல்லது வேறு இனத்தைச் சார்ந்தவர் என்பதால் நிறையக் கருத்து வேறுபாடுகள் ஏற்படும். ஆனால் அந்தக் கருத்து வேறுபாடு உறவுக்குக் குறுக்கே நிற்க வேண்டிய அவசியமில்லை.

நமது ஊரில் எதிர்க்கட்சிக்காரர்களை எதிரியாக நினைக்கும் மனோபாவம் மலிந்து போயிருக்கிறது. இவர்களை மனத்தில் எண்ணித்தான் "தம்பீ! மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணமுண்டு!" என்று அறிஞர் அண்ணாதுரை ஒருமுறை கூறினார். ஆனால், இப்போது தமிழகத்தில் மாற்றுக் கட்சியினரைக் கேவலமாகப் பேசி இழிவுபடுத்தும் நிலை அதிகம் பரவி நிற்கிறது.

உறவுமூலம் நாம் உயரவேண்டும்; பிறரை உயர்த்த வேண்டும். அந்தப் பரஸ்பர அன்பில், மரியாதையில் உறவு வளர்கிறது. அந்த உறவு உலகுக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. உற்று நோக்குமிடத்து அந்த உறவு நமது சகிப்புத் தன்மையில் பிறப்பதையும் வளர்வதையும் காணலாம். வேறுபட்ட கருத்துக் கொண்டிருக்க மற்றவர்களுக்கு உரிமை உண்டு என்பதை நாம் ஏற்றுக்கொண்டு பரஸ்பர அன்பை வளர்க்கிறோம்.

கலப்புத் திருமணங்களை எடுத்துக்கொள்ளுங்கள். அங்கே நிலவுவது சகிப்புத் தன்மை மட்டுமல்ல; அங்கே அவர்கள் வித்தியாசத்தைக் குறைக்கிறார்கள். இருவருக்கும் பொதுவான நல்ல விஷயங்களில் அதிகமாக ஈடுபடுகிறார்கள்.

பிறரது கொள்கைகள், நமது உரிமைகளைப் பாதிக்காதபோது, நம் சொந்த எல்லைக்குள் நுழையாதபோது, நாம் நம் சகிப்புத்தன்மையை வளர்க்கக் கற்றுக்கொள்ள வேண்டும். பிறரது தனித்தன்மைக்காக நாம் அவர்களை பாராட்டக் கற்றுக்கொள்ளவேண்டும். தேவைப்பட்டால் பிரச்னைகளை நியாயபூர்வமாக விட்டுக்கொடுத்துப் பேசி தீர்த்துக்கொள்ள முயற்சிக்கவேண்டும்.

'நீ சொல்வதை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால், அதைச் சொல்ல உனக்கு இருக்கும் உரிமையை என் உயிரைக் கொடுத்தும் காப்பேன்!'—பிரெஞ்சு மேதை வால்ட்டேர் தத்துவம் இது.

மனிதருக்கு மனிதர் கொள்கை வேறுபாடு ஏற்படும். நமது கொள்கைகளும் நெறிகளும்தான் நம் குணநலன்களை, நமது பண்பை உலகுக்குத் தெரிவிக்கிறது.

மகாத்மாகாந்தி உயர்நெறிகள் கொண்டவர். தனது நண்பர் ஒருவருக்கு இடம் கொடுத்து வீட்டில் தங்க ஏற்பாடு செய்திருக்கிறார். காந்தி இல்லாதபோது அந்த நண்பர், பெண்களை வீட்டில் அழைத்து வந்து சரசமாடிக் கொண்டிருப்பதாக வீட்டு வேலைக்காரன் தெரிவிக்கிறான். மறுநாள் உண்மையைக் கண்டுபிடித்த காந்தி, தன் நண்பரை வீட்டைவிட்டு வெளியேற்றுகிறார். நண்பரின் உறவைத் துண்டிக்கிறார். ஏன்?

நமது வாழ்க்கை நெறிகளுக்கு ஈடுபட்டுவராத நட்பு அது. இப்படிப்பட்ட நட்பு நல்லதல்ல. குழிபறித்துக் கீழே தள்ளும் குதிரை அது. நண்பர்கள் திருடர்களாயிருக்கிறார்கள் என்று நாமும் உடன்போனால், நாம் திருடாவிட்டாலும் நம்மையும் திருடன் என்றுதான் உலகம் சொல்லும்.

நெறிகள் அற்றவர்களது நட்பு, நமது குணநலன்களுக்கு அவர்களது சாயத்தைப் பூசிவிடும். ஆகவே, அங்கே நமது சகிப்புத்தன்மை நமக்குக் கேட்டை—நிரந்தரத் தீமையை விளைவிக்கும். அங்கே நாம் நமது நட்புக்காக, நண்பர்களுக்காக நமது நெறிகளை விட்டுக் கொடுக்கமுடியாது. அது ஆத்ம கொலையாகும். நெறிகள் இல்லாததோர் உறவு, துண்டித்துக்கொள்ள வேண்டிய உறவு, ஆபத்தான உறவு.

கொள்கை வேறுபாடு கொண்டவர்களை நாம் மதிக்க வேண்டும்; நெறியில் மாறுபாடு கொண்டவர்களை நாம் ஒதுக்கவேண்டும்.

பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் இதைத்தான் (Peer Pressure) நட்புதரும் நெருக்கடி என்று கூறுகிறார்கள். சிகரெட் குடிக்கும் கூட்டம், மது அருந்தும் கூட்டம் திருடும் கூட்டம், கஞ்சா உபயோகிக்கும் கூட்டம்—என்று ஒரு மாணவக் கும்பல் இருக்குமானால், அவர்களால் ஏற்றுக் கொள்ளப்படுவதற்காக, அவர்களுடன் சிநேகம் கொண்டிருப்பதற்காகத் தனது நல்ல நெறிகளையெல்லாம் தியாகம் செய்கிறான் ஓர் இளைஞன். இது 'கூட்ட நெருக்கடி.' அமெரிக்க மாணவ சமுதாயத்தில் இந்தக் கூட்டநெருக்கடி காரணமாக, கஞ்சா உபயோகிக்கும் நெருக்கடியும், படிக்கும் பெண்கள் தங்கள் கற்பைப்

பறிகொடுக்கும் பரிதாபமும் கதை கதையாகப் பின்னால் அவர்களால் சொல்லப்படுகிறது.

பெற்றோர்களும் ஆசிரியர்களும் சரியாகக் கண் காணித்து வரவில்லையென்றால் கெட்டு அழுகிய ஒரு பழம் மற்றெல்லா நல்ல பழங்களையும் அழுகி நாற்ற மடிக்கச் செய்யும் நிலை விரைவில் உருவாகும்.

ஆகவேதான் இளம் பருவத்தில் நாம் இளைஞர் களுக்குச் சரியான மாற்றை—ஆக்கபூர்வமான செயல்களில் ஈடுபடும் வேலைகளை—அளிக்கவேண்டும். அவர்களது இளமையும், துடிப்பும், ஆர்வமும் சரியான வழிகளில் இறங்கி அவர்களது எதிர்கால வாழ்க்கைக்கும், சமுதாய நலத்திற்கும் பயன்படும்படி இளைஞர் பயிற்சி முகாம்கள் வேண்டும்.

## 16

'வயது வேறுபாடு நம் உறவுக்குக் குறுக்கே நிற்கவேண்டிய அவசியமில்லை.'

நாம் எதிர்பார்க்கும் அச்சில் பிறரை உருவாக்க முயல்வது உறவல்ல—மகன் என்றாலும் சரி; மனைவி யென்றாலும் சரி!

உறவு என்பது பிறரது தனித்தன்மையை மதிப்பதில் இருக்கிறது. அடுத்து, உறவு பரஸ்பர உதவியில்—உபயோகத்தில் செயல்படவேண்டும். ஏற்றத்தாழ்வில் ஜீவிக்கும் உறவு அறுந்து போகக் காலத்தை எதிர்பார்த்து கொண்டிருக்கிறது.

நமது ஊரில், வீட்டு வேலைகள் எல்லாவற்றையும் மனைவியே இருபத்து நாலுமணி நேரமும் செய்ய

வேண்டுமென ஆண்கள் சமுதாயம் எண்ணப் பழகி யிருக்கிறது. 'மனைவியென்பவள், நல்ல நண்பன், நல்ல குரு, நல்ல தாசி' என்று வக்கணையாகப் பெருமைப் படுத்துவதன்மூலம் அநீதிகளை ஆண்கள் சமுதாயம் நியாயப்படுத்துகிறது. உறவுகளின் பலன்களைப் பெறும் நாம், சமநிலையில் இயங்குகிறதா உறவு அல்லது பிறரை நம் சௌகரியத்துக்கு உபயோகப்படுத்துகிறோமா என்பதைக் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்கவேண்டும்

இரண்டு பங்குதாரர்கள் ஆர்வத்துடன் ஒரு தொழிலைத் துவங்குகிறார்கள் என்றால், நாளடைவில் ஒருவர் மட்டும் உழைக்கும் நிலை வந்தால் அந்த உறவு நிலைப்பதில்லை. உழைப்பவர் பிரிந்து போக முயல்வார்.

சமநிலையில் இயங்காத உறவு ஆண்டான் அடிமை உறவாக நிலவுவதைக் காணலாம். ஆசிரியர்களுக்குக் கொடுக்க வேண்டிய சம்பளத்தை ஆசிரியர்களுக்குப் 'பொங்கல் பரிசு' என்று கொடுப்பது ஆண்டான் அடிமை மனோபாவத்தையே காட்டுகிறது.

மகாகவி பாரதியார் வறுமையால் கஷ்டப்படுகிறார் என்பதை உணர்ந்த ஒரு பணக்காரர் அவருக்குப் பணம் அளிக்க வந்தார். பாரதி சொன்னார் : "நண்பரே பணத்தை நீங்கள் உங்கள் கையில் வைத்துக்கொள்ளுங் கள். நான் எடுத்துக்கொள்கிறேன்!" பெறும்போது பாரதியார் எத்தகைய உறவை நிலை நிறுத்துகிறார் என்பதைக் கவனியுங்கள். தன்மானம் என்பது கவிஞர் களுக்கு மட்டுமே வேண்டிய விஷயமல்ல; அமைச்சர் களுக்கும் அதிகாரிகளுக்கும்...ஒவ்வொரு குடிமகனுக்கும் வேண்டிய விஷயம்.

பாரதிதாசனுக்கு அறிஞர் அண்ணாதுரை, பண முடிப்பை ஒரு விழா ஏற்பாடு செய்து கொடுத்தார்.

அப்போது அண்ணா கூறினார்: ''கவிஞர் அவர்களே; பணத்தை என் கையிலிருந்து எடுத்துக்கொள்ளுங்கள்!'' என்று.

தனி மனித வாழ்விலும் சரி, பொது வாழ்விலும் சரி; நாம் பிறரை நமக்கு வேண்டும்போது உபயோகப் படுத்திவிட்டு, தேவையில்லாதபோது 'அம்போ' என்று விட்டுவிட முடியாது. அதற்கான 'விலை'யை நாம் கொடுத்தாகவேண்டும்.

ஒரு நிர்வாகி தன் கீழ் வேலை பார்க்கும் மனிதர் களிடம் உத்தரவு போடுகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். கஷ்டமான காரியம்: ஆபத்தான நிலைமை என்னும்போது 'இவர் வந்து செய்யட்டுமே!'' என்று வேலை பார்ப்பவர்கள் முணுமுணுக்கக்கூடும். அப்போது உண்மையான தலைவன் என்ன செய்கிறான்? 'நீங்கள் நகருங்கள்!' என்று வேஷ்டியை வரிந்து கட்டிக் கொண்டு அந்த ஆபத்தான காரியத்தைத் தானே செய்ய முன்வருகிறான். போர்க்களத்தில் முன்னால் நிற்கிறான்.

வாழ்விலும் சரி, இந்தப் பிரபஞ்ச கதியிலும் சரி; எல்லா ஜீவன்களும் ஒன்றையொன்று சார்ந்து சம நிலையில் இயங்குகின்றன என்கிற உண்மையை நாம் உணர்ந்துகொள்ளவேண்டும். ஆசிரியருக்கும் மாணவருக் கும் ஒரு வித்தியாசமிருக்கிறது. அலுவலக அதிகாரிக்கும் எழுத்தருக்கும் பொறுப்பு வேறுபாடு இருக்கிறது. தளபதிக்கும் போர் வீரனுக்கும் ஏற்றத்தாழ்வு இருக் கிறது. அது அவரவர் பொறுப்புக்களால் ஏற்படும் வித்தியாசம். அந்த வித்தியாசத்திலும் ஒரு சமநிலை உறவு அழுத்தமாக, ஆழமாக ஓடுகிறது என்பதை நாம் கவனிக்கவேண்டும்.

உறவில் மூன்றாவது முக்கிய குணம் வயது வித்தியாசம். வயதில் உள்ள ஏற்றத்தாழ்வு பல சமயம் உறவுகளைப் பலப்படுத்துகிறது அல்லது பலவீனப்படுத்துகிறது.

உதாரணமாக, வயதான ஒரு பெரியவரைக் காணும் இளைஞன், ஒரு மரியாதைக்குட்பட்ட உறவைத் துவங்குகிறான். வயதும் அனுபவமும் மிகுந்த குருவின்முன் நிற்கும்போது ஏற்படும் உணர்வு நமது உணர்வைப் பலப்படுத்துகிறது. மாறாக, ஓர் இளம் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ளும் வயதேறிய ஒரு கணவனது உறவு, சற்று பலவீனத்தில் துவங்குகிறது.

வயது வந்த கணவன் காட்டும் உண்மையான அன்பு, அக்கறை, கரிசனம், தியாகம் எல்லாம் சேர்ந்து மறுபுறத்தில் ஒரு நளாயினியைத் தோற்றுவிக்கிறது.

ஆகவே வயது வேறுபாடு நம் உறவுக்குக் குறுக்கே நிற்க வேண்டிய அவசியமில்லை.

பல சமயம் அலுவலகத்தில், அதிகம் படித்துப் பட்டம் பெற்ற இளைஞர்களிடையே வயதில் பெரியவர்கள் வேலை பார்க்கின்ற நிலையை நாம் காண்கிறோம். மேலதிகாரியாய் இருக்கும் இளைஞர் தன் பதவியின் அதிகாரத்தை மட்டுமே நம்பிச் செயல்படுவாரானால் அவரால் எதையும் அதிகம் சாதிக்க முடியாது. சுற்றியிருப்போரிடம் நல்ல பெயரையோ, நல்ல உழைப்பையோ பெறுமுடியாது.

தனது நிர்வாகத் திறமையின்மூலம்—முடிவெடுக்கும் திறன் மூலம்—எல்லோரையும் உற்சாகப்படுத்திக் காரியங்களைச் சாதிக்கும் மனிதாபிமானம் மூலம் தனது தன்னம்பிக்கையின் மூலம்தான் உயர்ந்து நிற்க முடியும்.

தமிழ் நாட்டில் அத்தகைய பல இளம் நிர்வாகி களைக் கண்டு நான் அதிசயப்பட்டிருக்கிறேன். அவர் களது சிரித்த முகமும், கலகலப்பான பேச்சும், உற்சாக மான போக்கும் நம்மையும் கவ்விப் பிடித்துக்கொள்ளும் பாங்கினைக் கண்டு வியந்திருக்கிறேன்.

வயதில் பெரியவர்களை மதியுங்கள்.

''என்ன சார், சௌக்கியமா?'' என்று அன்போடு, மரியாதையோடு விசாரியுங்கள். அவர்கள் வாழ்வில், முன்னேற்றத்தில் அக்கறை காட்டுங்கள்.

பாராட்டுங்கள். அது கொஞ்சம் புகழ்ச்சியாக இருந் தாலும் பரவாயில்லை. பாராட்டப்படுபவர்கள் இப்படி அரிதான பாராட்டை மேலே உள்ளவர்களிடமிருந்து பெறும்போது, அது நிகழ்ந்த இடம் உள்பட எல்லா வற்றையும் ஆயுள் பூராவும் நினைவு வைத்துக் கொள்வார்கள். அந்தப் பாராட்டு நினைக்குந்தோறும் உற்சாகத்தையும் தன்னம்பிக்கையையும் தந்தவண்ணம் இருக்கும்.

வயதான நமது பெற்றோருக்கு 'இனி உடலுறவு எல்லாம் தேவையில்லை,' என்று பிள்ளைகள் தீர் மானித்து, தங்கள் சுய நலனுக்காக அவர்களைப் பிரித்து வைப்பது போல, '' வ ய தா ன பெரியவர்களுக்குப் பாராட்டுத் தேவை இல்லை, அவர்கள் இதை எல்லாம் கடந்தவர்கள்'' என்று எண்ணப் பழக்கப்படுத்தப்பட் டிருக்கிறோம். இதை நாம் சிந்திக்க வேண்டும்.

# 17

'கொஞ்சம் ஜாக்கிரதையாக வயது வந்தவர்களோடு பழகினால், நாம் எத்தனையோ விஷயங்களைக் கற்றுக் கொள்ளலாம்.'

வயதில் பெரியவர்களை எதிலும் ஒதுக்கிவிடாமல் அவர்களையும் இளைஞர்கள்போல் எண்ணி எல்லா விஷயங்களிலும் ஈடுபடுத்துவது, பெரியவர்களிடம் ஒரு ஆரோக்கியமான மனநிலையை உண்டாக்குகிறது என்கிறார்கள் அறிஞர்கள். பெரும்பாலான பெரியவர் கள் இதை ரசிப்பார்கள்; வரவேற்பார்கள்.

கொஞ்சம் ஜாக்கிரதையாக வயது வந்தவர்களோடு பழகினால், நாம் எத்தனையோ விஷயங்களைக் கற்றுக் கொள்ளலாம்,

உறவில் மிக முக்கியமான பிணைக்கும் நூல், பிறரது முன்னேற்றத்தில் நாம் கொண்டுள்ள ஆர்வம்தான். யாராக இருந்தாலும் சரி, அவர்களுக்குப் பிடித்த விஷயத்தைப்பற்றி நாம் பேசத் துவங்கினோமானால் விசாரிக்க ஆரம்பித்தோமானால் சூழ்நிலையே இனிமை யாக மாறுவதைக் காணமுடியும்.

''ஐந்து நிமிடம்தான் உங்களுடன் பேச முடியும்!'' என்று பேட்டிக்கு அனுமதி கொடுப்பவர்களை அரை மணி நேரம், ஒரு மணி நேரம் என்று ஆர்வத்துடன் பேச வைக்கமுடியும். அதே சமயம், நமது புத்திசாலித் தனத்தை பிரகடனப்படுத்தவோ, நமது பழங்கதைகளை அவிழ்த்து விடுவதற்காகவோ பேச்சை உபயோகிக்கும் போது அது ஒரு தலைப்பக்க உறவாக—தொடர்பாக— நின்றுவிடுகிறது. எல்லாமே நம் 'அணுகுமுறை'யைப் பொருத்தது!

ஒரு சமயம் 'தமிழகத்து விஞ்ஞானிகள்' என்ற கட்டுரைத் தொடருக்காகத் தோல் ஆராய்ச்சி நிறுவனத்தின் தலைவர் ('கனிஷ்கா' விமான விபத்தில் மறைந்த) டாக்டர் நாயுடம்மாவைப் பேட்டி காணச் சென்றிருந்தேன். அவர் அப்போது இளைஞர். பெரிய பதவி. அமெரிக்காவில் டாக்டர் பட்டம் பெற்றுவிட்டு வந்திருந்தார். அவரது அறையிலும் சூழ்நிலையிலும் அதிகாரத்தின் கனத்தை—அங்கு வீசும் காற்றில்கூட—என்னால் உணர முடிந்தது. 'இரண்டும் இரண்டும் நாலு என்பதைப்போல, பதில் சொல்லிக்கொண்டு வந்தார். திடீரென்று செய்தித்தாளில் படித்த ஒரு செய்தி நினைவுக்கு வந்தது. "தோல் ஆராய்ச்சி நிறுவனத்தின் தலைவ்ரான நீங்கள், பளுவண்டி தள்ளும் சாதாரண உழைப்பாளர்களுக்குச் செருப்பு அளிக்கப்போவதாகப் படித்தேனே, அதைப் பற்றிச் சொல்ல முடியுமா?" என்று கேட்டேன்.

டாக்டர் நாயுடம்மாவின் முகத்தில் ஒரு பிரகாசம், மலர்ச்சி, ஒரு கூச்சம் எல்லாம் ஏககாலத்தில் தென்பட்டன. மனம்விட்டுப் பேச ஆரம்பித்தார். இரண்டு மணி நேர பேட்டி முடிந்து நான் வெளியே வரும்போது என்னைப்பற்றி அக்கறையாக விசாரித்து, "டாக்டர் பட்டம் பெற இங்கே ஆராய்ச்சி செய்யுங்களேன், இடம் தருகிறேன்;" என்று அழைப்பு விடுத்தார். இருபதாண்டுகளுக்குப் பின், இன்றைய ஆந்திர முதல்வருடன் அமெரிக்கா வந்தபோது என்னை நினைவு வைத்துக் கொண்டு தனியே அழைத்து எல்லோரையும் அறிமுகம் செய்துவைத்தார்.

பிறரது வளர்ச்சியில், பிறரது லட்சியங்களில் நாம் காட்டும் உண்மையான அக்கறைதான் உறவுகளின்

ஆணிவேர். வயது வந்தோரிடம் நாம் காட்டும் ஆர்வம்' நம்மை ஒரு உதவுபவனாக—பெருந்தன்மையும் நல்லெண்ணமும் கொண்ட மனிதனாகத் தூக்கிக் காட்டுகிறது.

அடுத்து, நன்றி பாராட்டுவது. உறவின் மிக முக்கிய மான அம்சமாக இதைக் குறிப்பிடவேண்டும். நன்றி என்பது ஆத்மார்த்தமான செயல்; உறவுகளின் அடிப் படை. அதை உணர்ந்துதான் 'நன்றி மறப்பது நன்றன்று' என்று தெளிவாகவும் கண்டிப்பாகவும் வள்ளுவர் அன்றே எழுதி வைத்துவிட்டுப் போயிருக்கிறார்.

யோகி மிலா ரப்பா என்ற திபெத்திய புத்த ஞானி குகைகளிலே அமர்ந்து தவம் செய்கிறார். சாப்பிட ஒன்றுமில்லை. அருகிலுள்ள மலைகளில் வளரும் முள்செடிகளின் இலைகளைப் பறித்துத் தண்ணீரில் கொதிக்க வைத்து உண்கிறார். சரியான ஆகாரமின்றி உடல் மெலிந்து எலும்புக்கூடாகிறது. அங்கே திருடர்கள் வருகிறார்கள். அவரைக் கண்டு பிசாசு என்று முதலில் பயப்படுகிறார்கள். பிறகு அவர் யோகி என்பதை உணர்ந்தபோது தங்களிடமிருந்த உணவை அவருக்கு அளிக்கின்றனர்.

அப்போது யோகி மிலா ரப்பா "நண்பர்களே! நீங்கள் கொடுத்த உணவின் அளவும் பெறுமானமும் சாதாரணமாயிருக்கலாம். ஆனால், நீங்கள் என் உயிரைக் காப்பாற்றினீர்கள். நீங்கள் செய்த உதவி மகத்தானது. எல்லா ஜென்மங்களிலும் நீங்கள் நலமுடன் இருப்பீர்கள்!" என்று ஆசி கூறுகிறார், கவனியுங்கள். ஒரு யோகி—முற்றும் துறந்த முனிவர்—நன்றி பாராட்டுகிறார். ஒரு கவளத்து உணவுக்கு அப்படி நன்றி கூறுகிறார்.

இதைத்தான் வள்ளுவர்—உதவி என்பது யாருக்குச் செய்கிறோமோ அவர்களின் தன்மையைப் பொறுத்தது என்று கூறுகிறார். பெரியவர்கள் சிறு உதவியைக்கூடப் பெரியதாகப் போற்றுவார்கள் என்று எழுதுகிறார்.

சிறுமை படைத்தவர்களோ பிறர் செய்த உதவியில் ஏதேனும் சிறு குறை இருக்குமானால் அதைப் புலப் படுத்திப் புலம்பிக்கொண்டிருப்பார்கள்.

ஒன்றையொன்று சார்ந்து நிற்கும் இப் பிரபஞ்சத் தில் மனிதன் எப்படியெல்லாம் நன்றி செலுத்துகிறான் என்று கவனியுங்கள். 'உணவுக்காக ஒரு மிருகத்தைக் கொல்லும்போது' அதற்கு நன்றி தெரிவித்துவிட்டு அந்த மிருகம் 'நல்லுலகம்' செல்ல வேண்டுமெனப் பிரார்த்தித்துவிட்டு அந்த உயிரைத் தியாகம் செய்யும் செயல் இஸ்லாமிய மதத்தவரிடையே உண்டு. நியூஸிலாந்துக்கு அருகில் வாழும் மௌரீ எனப்படும் ஆதிவாசிகள், காட்டில் இருக்கும் ஒரு மரத்தை வெட்டும்போதுகூட அதற்கு நன்றி தெரிவித்துவிட்டு அதன் ஆத்மாவை அந்தக் காட்டிலுள்ள பிற மரங்களுக்குப் பரவச் செய்யும் ஒரு சடங்கைச்செய்து விட்டு அந்த மரத்தை வெட்டுகிறார்கள்.

பகுத்தறிவாளர்கள் இதைக்கண்டு நகைக்கக்கூடும். ஆனால், அதுவல்ல விஷயம். இங்கே முக்கியமானது நன்றி பாராட்டுபவர்களது மனோநிலை.

ஏன் இந்த மனோநிலை மிக முக்கியமானது என்று குறிப்பிடுகிறோம்?

வாலஸ் டி. வாட்டில்ஸ் என்ற தத்துவ ஞானி, "நன்றி தெரிவிக்கும்போது நமக்கே ஒரு நிறைவு ஏற்படுகிறது. மனத்தில் ஒரு அசாதாரணமான அன்பு

பொங்கிப் பிரவகிக்கிறது. மேலும், பற்பல நன்மைகள் நம் வழியில் வருமாறு ஒரு நீரோட்டத்தைத் துவக்கி விடுகிறது'' என்று எழுதுகிறார். ஆகவே, மேலும் நீங்கள் நன்மை பெற நன்றி பாராட்டுங்கள்.

நன்றி பாராட்டும்போது நாம் எத்தகைய மனநிலையில் இருக்கிறோம் என்பதை நன்கு ஆராய்ந்தோமானால் ஒரு விஷயம் தெளிவாகும். மனம் அப்போது, ஆத்மார்த்தமான ஒரு பூரணத்துவ நிலையில் இருக்கிறது. அப்போது அங்கே வஞ்சம், பொறாமை, காமம் போன்ற தீய எண்ணங்கள் நிலவுவதில்லை. நமது மனத்தின் ஜன்னல்கள் எல்லாப் பக்கங்களிலும் திறந்து விடப் பட்டிருக்கின்றன. அந்தத் திறப்புகளின் வழியே பெரியவர்களது வாழ்த்துக்களும், ஞானிகளது ஆசியும் வெள்ளமாக நம் மனத்தில் புகுந்து உடலில் இறங்கி, வாழ்வில் பரவ வழி பிறக்கிறது.

உதவி செய்வதன் மூலமும், உதவி பெறும்போது நன்றி பாராட்டுவதன் மூலமும் நாம் நம்மைச் சூழ்ந்துள்ள உலகை இனிமை நிறைந்த உலகமாக மாற்றுகிறோம்; நன்மைகளுடன் நேர் தொடர்புகொள்கிறோம்.

# 18

**'இன்று தமிழ்நாட்டில் சாதி அடிப்படையில் தேர்தல்களும் கொடுமைகளும் நடக்கிறது என்றால் அதற்கு அரசே உடந்தை என்றுதான் பொருள்.'**

பெரியவர்களை மதிக்கும் பண்பும் பிறர் உதவிக்கு நன்றி பாராட்டும் உள்ளமும், பிற மதங்களிடம் சகிப்புத்

தன்மையும் தமிழ் சமுதாயத்தினிடையே ஊறிப்போயி ருக்கிறது. இவை எல்லாம் நாம் பெருமைப்பட வேண்டிய விஷயங்கள்; போற்றிப் பாதுகாக்க வேண்டிய உறவின் அடிப்படைகள்.

பெரியவர்களிடம் பழகும்போது அவர்களை அனு சரித்து அவர்கள் அனுமதிக்கும் எல்லையை உணர்ந்து நாம் உறவுகொள்ள முயலவேண்டும். நாமாக உரிமை களை எடுத்துக்கொள்ளக்கூடாது. அவர்கள் சுமுகமாகப் பழகத் துவங்கும்வரை நாம் காத்திருக்கவேண்டும். இளைஞர்களுடன் பழகும்போது அவர்களுடன் நமது அனுபவங்களைப் பகிர்ந்துகொள்ளவேண்டும். அது நெருக்கத்தையும் உறவையும் உண்டு பண்ணும்.

ஆனால், ஆழ்ந்து யோசித்துப் பார்த்தால் சம வயதுள்ளவர்களிடம் நாம் பழகும் விதமும். வயதில்— அனுபவத்தில் மூத்தவர்களுடன் நாம் பழகும் விதமும் வேறுபடுகிறது, சம வயதுள்ளவர்களோடு நம்மை நாம் சதா ஒப்பிட்டுப் பார்த்து பொறாமைப்படுகிறோம். ஆண்டவன் சிருஷ்டியில் ஒவ்வொரு மனிதனும் உருவில், முகபாவத்தில், சிந்தனையில், குணநலனில் முற்றிலும் வேறுட்டவர்கள் என்பதைப் புரிந்துகொண்டோ மானால் ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டு சங்கப்பட மாட்டோம்.

உறவுகளில் 'இவர் இந்த இனம்!' என்கிற எண்ணம் உறவுகளைப் பாதிக்கிறது அல்லது வளர்க்கிறது என்று சமுதாய இயல் அறிஞர்கள் எழுதுகிறார்கள்.

நான் இங்கு அமெரிக்காவின் தென் மாநிலம் ஒன்றில் வசிக்கிறேன். இங்கு கறுப்பர்கள் அதிகம். கறுப்பர்களுக்குச் சுதந்திரம்—ஓட்டுரிமை அளிக்கக் கூடாதென்று தென் மாநிலங்கள் பிரிந்து போர் தொடுத்

தது ஒரு காலம். ஆகவே, நிறத்தால் கறுப்பர்களைப் போல் தோன்றும் இந்தியர்களையும் மறைமுகமாக ஒதுக்கும் செயலைக் காணமுடிகிறது. இது எப்படி இருக்கிறது என்றால், தென்னாப்பிரிக்காவில் இன வெறியை எதிர்த்துப் போராட்டம் நடத்திய மகாத்மா காந்தி, இந்தியா வந்தபோது நாம் ஹரிஜனங்களை நடத்தியதைக் கண்டு மனம் நொந்ததைப் போலிருக் கிறது.

இந்த இனப் பாகுபாடு என்றாவது மறையுமா என்ற சந்தேகம் நம்முள் எழுகிறது. மனம் நொந்து மார்ட்டின் லூதர் கிங் ஒரு சமயம் அமெரிக்காவின் தலைநகரான வாஷிங்டனில் முழங்கினார் :

''எனக்கோர் கனவு உண்டு. இன்று நாம் எவ்வளவோ துன்பங்களை அனுபவித்தபோதிலும் எனக்கோர் கனவு உண்டு. அது அமெரிக்க நாட்டு லட்சியங்களில் பிறந்த கனவு. ஒரு நாள் இந்தச் சமுதாயம் விழித்து எழும், தன் லட்சியத்தை நிறை வேற்றும்! 'எல்லா மனிதர்களும் ஆண்டவனால் சமமாகப் படைக்கப்பட்டவர்கள்' என்ற உண்மையை நிறைவேற்றும்.

''எனது நான்கு சின்னக் குழந்தைகளும் ஒரு நாள் தங்களது தோலின் நிறத்தால் தீர்மானிக்கப்படாமல் தங்கள் குணநலன்களின் உயர்வால் மதிக்கப்படுவார்கள், என்ற கனவு எனக்குண்டு.'' இப்படி இனப்பாகுபாட்டின் குரலாக அவர் அன்று பேசினார்.

சொல்லப்போனால் ஆழ்ந்து சிந்தித்தால் உலகிலேயே இந்த இனப்பாகுபாட்டுக்குப் பிறப்பிடம் தமிழ்நாடுதான் என்று நான் எண்ணுவதுண்டு, எழுதவே கூசுகிறது! ஆனால், உண்மையைச் சொல்லத்

தான் வேண்டும்! நம் உபயோகத்திலிருந்து முற்றிலும் மறக்கப்பட்டசொல், இன்று உலகில் பரவலாக உயிர் பெற்றிருக்கிறது. தீண்டத்தகாதவன் என்ற பொருள் கொண்ட 'பறையன்' என்ற தமிழ் வார்த்தை, இன்று ஆங்கில அகராதியில் ஆங்கிலச் சொல்லாக அமெரிக்கா விலும் பிற நாடுகளிலும் உபயோகப்படுத்தப்படுகிறது. தமிழர்களாகிய நாம் காட்டிக் கொடுத்தோம். அந்த வார்த்தையை—'அவர்களை' முன்பு எப்படி நடத்தி னோம் என்பதன் மூலம். மனிதனின் தன்மானத்தின் தலையிலடித்து அதில் நிறைவு காணும் ஒரு மனித இனத்தை எப்படி மன்னிப்பது? யார் மன்னிப்பது?

இன்றும் தமிழ் நாட்டில் சாதி அடிப்படையில் தேர்தல்களும் கொடுமைகளும் நடக்கிறது என்றால் அதற்கு அரசே உடந்தை என்றுதான் பொருள். அதைக் கண்டும் காணாமல் இருப்பது தமிழ் மக்களுக்கு நல்ல தல்ல! இப்படித்தான் ஜெர்மனியில் ஹிட்லரின் கொடுமைகளைக் கண்டும் காணாமல் பொதுமக்கள் வாழ்ந்தார்கள். சத்தியத்துக்கும் தர்மத்துக்கும் குரல் கொடுக்காத அந்த மக்கள் பின், அதன் பலனை அன்றும் அனுபவித்தார்கள்; இன்றும் அனுபவிக்கிறார் கள்.

"நான் செட்டியார். நான் பிராமணர், நான் கவுண்டர்" என்றெல்லாம் பேசிப் பிறரைத் தாழ்த்த, ஒதுக்க, நம் பொறாமையைத் தெரிவிக்க, அவர்கள் மேலே வராதபடி அமுக்க—நாம் நம் சாதியைப் பயன்படுத்தினோமானால் எங்கே போவோம்?

"படிச்சவன் சூதும் பாவமும் பண்ணினால்

போவான் போவான், ஐயோவென்று போவான்!" என்கிறார் பாரதியார்.

இனப் பாகுபாடு ஒருமையை வளர்க்கவில்லை; வேற்றுமையை வளர்த்திருக்கிறது. அன்பை வளர்க்கவில்லை; ஆணவத்தை வளர்த்திருக்கிறது. உண்மைக்குத் துணை போகவில்லை. ஒரு மனிதனை—ஒரு இனத்தைத் தாழ்த்தி ஒதுக்கி அவர்களை முன்னேற விடாதபடி செய்யும் மாபாதகத்துக்கு உடந்தையாயிருக்கிறது.

இந்தச் சாதிப் பாகுபாடு மனத்தில் எத்தகைய முத்திரைகளைக் குத்தி இருக்கிறது? 'இவர் இன்னார்' (Stereo Typing) என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். சாதியின் பெயரைச் சொன்ன உடனேயே, ''இவனா? இவன் கஞ்சன்!'' ''இவன் நம்பிக்கைத் துரோகி!'' ''இவன் மூளை இல்லாதவன்!'' என்று பற்பல வழிகளில் உடனே அவர்களைப் பற்றிய உடனடியான ஒரு அபிப்பிராயத்தை நம்முள் உருவாக்கிவிடுகிறது. அப்படி ஒரு முன் அபிப்பிராயம் உருவாகவில்லை என்றால் 'இவர் எப்படி இருப்பாரோ' என்று அவகாசம் எடுத்துக்கொண்டு, அவர் செயலைக் கவனித்து நாம் அவர்களைப்பற்றித் தீர்மானம் செய்யமுடியும், அன்பைக் காட்டமுடியும் அல்லது ஒதுங்கி செல்லமுடியும்.

இது ஆணவம் மிகுந்த அறியாமை.

உறவுகளை வளர்க்கும்போது, இனப் பாகுபாட்டை நாம் காணவேண்டாம். மனிதர்களைக் காண்போம். சக ஜீவன்களை, சக பயணிகளைக் காண்போம்.

# 19

**'உடலுறவு சம்பந்தமான பல பிரச்சனைகளை, கணவனும் மனைவியும் மனம்விட்டுப் பேசாமல் முடக்கி வைத்திருப்பதனால் —அந்த அதிருப்தி பல்வேறு வகைகளில் தோன்றிப் பொதுவான மனித உறவைப் பாதிக்கிறது'—என்று கூறுகிறார்கள் அறிஞர்கள்.**

மனித உறவுகளில் மிகவும் புனிதமானது ஆண்—பெண் உறவு. அதன் கவர்ச்சி இயற்கையின் அடிப்படையில் பெரிதும் செயல்படுகிறது. எனினும், இந்த உறவின் வலிமையையும் தன்மையையும் நமது காரண காரிய அறிவு நிச்சயிக்கிறது.

புனிதமான காதல் உறவு எந்தெந்த வகைகளில் ஆதரவு பெறுகிறது என்பதை வரிசைப்படுத்தி இருக்கிறார்கள் சமுதாய இயல் அறிஞர்கள்.

அறிவுபூர்வமாக—கிட்டத்தட்ட ஒரே அறிவு நிலையில் இருவர் இருக்கும்போது—அவர்களிடையே உள்ள உறவு ஒரு அசாதாரணப் பிணைப்பை, கவர்ச்சியை ஊட்டுகிறது.

இரண்டாவதாக, பழகும் தன்மையில் ஒருவருக்கொருவர் காட்டும் மரியாதையில் பிறருக்காக மற்றவர் செய்யும் காரியங்களில் இந்த உறவு உறுதிப்படுகிறது.

மூன்றாவதாக, உணர்வுபூர்வமான ஐக்கியம் இது. இந்த உணர்வு பரஸ்பர அன்பு வெளியீட்டாலும், அன்பின் ஒரு பூரணத்துவ நிலையான உடல் உறவின் ஈடுபாட்டாலும் வலிமை பெறுகிறது. போதுமான அன்பு காட்டாமல் வெறும் உடல் உறவு மட்டுமே நோக்காய்ச் செயல்படுவது, இந்த உறவை நெடுநாள் ஜீவிக்க வைப்ப

தில்லை. இதன் முக்கியத்துவத்தை அனுசரித்துத்தான் அந்த நாளில் 'காம சூத்திரம்' என்ற நூலை எழுதி வைத்தனர்.

நான்காவதாக, ஆணும் பெண்ணும் இணைந்து பண்புகளால், தியாகங்களால், சமுதாயத்துக்கு உதவும் பணிகளால் உயர் நெறிகளில் ஈடுபடுவதால் ஒரு ஆனந்த மயமான ஞான உறவு ஏற்படுகிறது.

ஆணும் பெண்ணுமான இரண்டு விஞ்ஞானிகள் தங்கள் ஆராய்ச்சி சம்பந்தமாக அடிக்கடி சந்தித்து விவாதித்துக் கொண்டிருந்தார்கள். விரைவில் அவர்களது பரஸ்பர நட்பு திருமணத்தில் முடிந்தது, அறிவு நிலை காரணமாக.

மனத்திலே அன்பை வளர்த்து அதை வார்த்தை களிலே வெளிப்படுத்திச் செயலிலே அவற்றைப் பரிணமிக்க செய்தவர்களின் காதல் கதை ஏராளம். முடவனிடம் அவன் மனைவி எதைக் காண்கிறாள்? அன்பை.

பிறரது நம்பிக்கைகளை மதித்து நடப்பது, அதைப் புரிந்துகொள்வது, அதற்கு ஒத்துழைப்பது—இவை எல்லாம் நாம் அன்றாட வாழ்வில் ஞான மார்க்கத்தைப் புகுத்துவதற்கு முதல் படியாகும். ஞான மார்க்கத்தையும் உடல் உறவையும் இணைத்து 'தாந்திரீகயோகம்' என்று பல துறவிகள் கொண்டாடுகின்றனர். அதாவது. உடல் உறவு ஐக்கியத்தின்மூலம் ஒரு 'சமாதி' நிலையை—யோக நிலையை—எல்லா உணர்வுகளும் ஒருங்கிணைந்து பரம்பொருளுடன் ஐக்கியமாகும் நிலையை வருணிக்கிறார் கள்.

ஞான மார்க்கங்களின் உண்மைகளை ஆழமாக அனுபவித்து உணராதவர்கள், இதைச் சுதந்திரமான உடல் உறவுக்கு அளிக்கப்பட்ட அனுமதியாக எடுத்துக்

கொள்கிறார்கள். இதனால் ஊருக்கு உபதேசம் செய்யும் சில துறவிகளின் செயல்களே ஏறுமாறாய் இருக்கிறது. ஆகவே, உடலுறவின் சுகம் காண யோகப் போர்வையைப் போர்த்திக்கொண்டு ஆராதிப்பது தன்னைத் தானே ஏமாற்றிக்கொள்வதாகும். கட்டுப்பாடற்ற காம இச்சைக்கு தாந்திரீகப் போர்வை ஏன்?

உறவுகளை வளர்ப்பதில் இரண்டு விஷயங்கள் தேவைப் படுகின்றன. ஒன்று: காலம்—அவகாசம். இரண்டாவது: பேச்சு—பரஸ்பரம் ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ளுதல்.

ஒருவருடன் ஒருவர் சேர்ந்திருக்கும் காலம் அதிக மாகும்போது உறவு பலப்படுகிறது. அவர்கள் பேசிக் கொண்டிருக்கத்தான் வேண்டுமென்கிற அவசியம் இல்லை. அன்பு—நெருக்கத்தினால் ஏற்படுகிறது. ஒருவருடன் மற்றவர் இருக்கும் கால அவகாசத்தில் வலுப்படுகிறது.

பிலடெல்பியா நகரில் நடத்திய ஆராய்ச்சி ஒன்றில் மகிழ்ச்சியான தம்பதிகளுக்கும் மற்றவர்களுக்கும் உள்ள வேறுபாட்டின் காரணத்தை ஆராய்ந்தார்கள். அவர்கள் கண்டது: இனிமையான வாழ்க்கை நடத்தும் தம்பதிகள் தூங்குவது, வேலைக்குச் செல்வது போன்ற நேரங்களைக் கழித்து மீதி இருக்கும் நேரத்தில் மூன்றில் ஒரு பங்கை ‘ஒருவர் முன்னிலையில் ஒருவர்’ என்று செலவிடுகின்றனர். சேர்ந்து செலவழிக்கிறார்கள். பேசுகிறார்கள், வேலை செய்கிறார்கள் அல்லது தோட்டம் போடுகிறார்கள்.

மனம்விட்டுப் பேசுவது ஒருவரை ஒருவர் பூரண மாகப் புரிந்துகொள்ள வழி செய்கிறது. இதனால் பிறரை மதிக்கவும், ஒரு சகிப்புத் தன்மையை வளர்த்துக்

கொள்ளவும் முடிகிறது. உடலுறவு சம்பந்தமான பல பிரச்னைகளை, கணவனும் மனைவியும் மனம்விட்டுப் பேசாமல் முடக்கி வைத்திருப்பதனால்—அந்த அதிருப்தி பல்வேறு வகைகளில் தோன்றி, பொதுவான மனித உறவைப் பாதிக்கிறது—என்று கூறுகிறார்கள் அறிஞர்கள்,

மார்ஸ்டர்ஸ், ஜான்சன் என்ற தம்பதி, செக்ஸ் ஆராய்ச்சியாளர்கள். பதினைந்து ஆண்டுகளுக்குமுன் அமெரிக்காவில் வெகு பிரபலமாக இருந்தார்கள். அவர்கள் செய்த காரியம், வீட்டின் படுக்கையறைக்குள்ளே அமுக்கி வைக்கப்பட்டிருந்த பல பிரச்னைகளையும் மருத்துவ ஆராய்ச்சி அறைக்கு எடுத்து வந்து அலசியதுதான். பின் அது பற்றி ஒரு புத்தகம் எழுதினார்கள். உடல் உறவில் உத்திகள் மட்டும் தேவை அல்ல; அன்பு, கரிசனம், பரஸ்பர மரியாதை தேவை என்று விளக்கினார்கள். அதில் தம்பதிகள் வெற்றி பெற வழிகளைக் கூறினார்கள்.

மனத்தில் எழும் சிக்கல்கள், ஒரு ஆணின் ஆண்மையையும் ஒரு பெண்ணின் பெண்மையையும் பறித்து விடும் என்று கூறினார்கள். அதாவது, அவர்களது உடலின் பூரண இயக்கத்தை இவை பாதிக்கின்றன என்றார்கள். உணர்வின்றி யந்திர கதியில் ஈடுபடும் உடல் இயக்கம்—வெகு விரைவில் உடலுறவை முடித்து விடும் போக்கு—இவை எல்லாம், வாழ்வின் மற்ற நேரங்களில் எழுந்த பயங்களினாலும் குற்ற உணர்வுகளினாலும் விளைபவை என்கிறார்கள் அவர்கள்.

முன்னேறிய அமெரிக்க நாட்டில்கூட—உடலுறவு ஒரு கெட்ட விஷயம், அசிங்கமானது, ஆபத்தானது, பேசக்கூடாதது என்ற ரீதியில் மக்கள் வளர்க்கப்பட்டிருக்

கிறார்கள் என்பதைத் தங்களிடம் சிகிச்சைக்கு வருவோரிடமிருந்து அறிந்து கொண்டார்கள்.

இதில் இந்திய மக்களாகிய நாம் செல்லவேண்டிய தொலைவு மிக அதிகம். கிராமத்து மக்களின் அறியாமைக்கு எல்லையே இல்லை. பள்ளிகளில் உடல் பாகுபாட்டைப் பற்றிய போதுமான அறிவு இல்லாத தன் விளைவை மருத்துவர்கள் கூறும் பரிதாபம் நிறைந்த கதைகளிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

மனித வாழ்க்கைக்கு முக்கிய தேவை மூன்று விஷயங்கள். அவை ; 1. நமது மனம் செயல்படும் விதத்தைப் பற்றிய தெளிவான அறிவு. 2. நமது உடல் எப்படிச் செயல்படுகிறது என்பதைப் பற்றிய பூரணமான அறிவு. 3. குழந்தைகளை எப்படி வளர்ப்பது என்ற அறிவு. (அதைத் தெரிந்துகொள்ளும் முன்னே குழந்தைகளைப் பெற்றுக்கொண்டு விடுகிறோம். நாம் வளராத நிலையிலேயே நாம் வளர்க்க வேண்டிய பொறுப்புக்கு வந்து விடுகிறோம்!)

என்னென்னவோ பாடங்களையும் அறிவையும் நமது தலைக்குள் நுழைக்க முயலும் நம் கல்வி முறை, ஏன் இந்த முக்கியமான மூன்று அறிவையும் நமக்குப் போதிக்க முன்வரவில்லை என்று நெடுநாளாக யோசித்துக்கொண்டிருக்கிறேன்...!

## 20

எனது நண்பர் பரஞ்சோதி வந்தார். பாலுணர்வின் வலிமையைப் பற்றியும், அதனால் உறவுகளில் ஏற்படும் தடுமாற்றங்களைப் பற்றியும் பேசிக்கொண்டிருந்தோம்.

சிந்தித்தவண்ணம் தனது சொந்த வாழ்வில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தைக்கூறத் துவங்கினார்—

"நான் அப்போது இளைஞன்—கல்லூரியில் சோதனைக்கூடத்தில் உதவியாளனாக வேலை பார்த்தேன். எனக்கு அப்போதுதான் திருமணமாகியிருந்தது.

"ஒவ்வொரு வாரமும் மாணவர்கள் ஆய்வுக்கூடத்தில் சோதனைகளைச் செய்து பார்த்துவிட்டு மறு வாரம் ரெகார்ட் நோட்டுப் புத்தகத்தில் எழுதிக்கொண்டு வந்து சமர்ப்பிக்கவேண்டும்.

"ஒரு பெண், இரண்டு மாதமாகத் தனது ரெகார்ட் நோட்டைக் கொண்டு வராததைக் கண்ட நான் கோபித்தேன். அவள் சொன்னாள்: 'சார்! நீங்கள் இரண்டு வாரமா காலேஜுக்கு வரலை. அதனால்தான் நான் கொண்டு வரலை. உங்களிடம்தான் நான் என் புத்தகத்தைக் கொடுப்பேன். வேற யார்கிட்டேயும் நான் கொடுக்கறதில்லே சார்!'

"முன்பு நான் இதே பெண்ணை கல்லூரிப் பேரவைக்குப் போட்டியிடுமாறு சொன்னேன். இவளிடம் எனக்கு இனம் காண முடியாத ஒரு கவர்ச்சி! அவள் ஜெயித்தவுடன் என்னைப் பார்த்துக் கேட்டாள், 'நான் ஜெயிப்பதில் உங்களுக்கென்ன சந்தோஷம்?' என்று. அப்போதே அந்தக் கேள்வியிலேயே மனம் சலனப் பட்டது.

"இந்த முறை அவள் இப்படிச் சொன்னதும் நான் திக்குமுக்காடிப் போய்விட்டேன். அவளை ஒரு கணம் ஏறிட்டுப் பார்த்தேன். அவளை அப்படியே இழுத்துக் கொண்டு எங்கோ கண்காணாத தேசத்துக்கு ஓடி விட

வேண்டும் என்ற வெறி ஒரு கணம் எழுந்தது. ஆபத்தான இன்ப நிலையில் சிக்கியிருப்பதை உணர்ந்தேன். இந்தச் சம்பவம் நிகழ்ந்த இடம், நேரம் எல்லாம் இன்னும் பசுமையாக என் மனதில் பதிந்து போயிருக்கிறது.

''ஒரு கம்பெனியில் அதன் மேலதிகாரி, பஸ்ஸில்—கண்டக்டர், வகுப்பறையில்—ஆசிரியர் இவர்களுக்கு எல்லாம் ஒரு தனி முக்கியத்துவம் உண்டு, அது பதவி தரும் முக்கியத்துவம். அவர்கள் அழகானவர்களாகவோ, நல்ல குணம் படைத்தவர்களாகவோ, இளைஞர்களாகவோ இருக்க வேண்டியதில்லை. பதவியின் முக்கியத்துவத்தால் எல்லோரும் அவருக்கு முக்கியத்துவம் கொடுத்து முகத்தைப் பார்த்து அன்பாகப் பேசும் நிலை ஏற்படுகிறது. அப்படித்தான் இது நிகழ்ந்ததோ என்று யோசித்தேன். 'இல்லை' என்றது என் மனம்.

''அந்தப் பெண்ணின் நினைவு என்னை விடவில்லை. என்னை விரட்டியது, நல்லவேளையாக, இதன் விளைவுகள் என்னாகும், இதன் நியாயம் என்ன, இதனால் என் சுய கௌரவம் என்னாகும் என்றெல்லாம் யோசித்துப் பார்த்தேன்.

''வாழ்வில் சில சம்பவங்கள் இலக்கியங்களுக்காக—எழுதப்பட மட்டுமே—நிகழ்கின்றன. வாழ்வை அதன்படி அமைத்துக்கொள்ள முடியாது என்று சமாதானப் படுத்திக்கொண்டேன்.

''பாலுணர்வின் முனைப்பு இருக்கிறதே...'' என்று அந்தக் கல்லூரிப் பேராசிரியர் பேசிக்கொண்டே போனார்.

மனித உறவுகளில் ஆண்—பெண் உறவு அசாதாரணமானது. ஒரு ஆணும் பெண்ணும் பழகும்போது,

தெரிந்தோ தெரியாமலோ பாலுணர்வுகள் அங்கே அடித்தளமாக நிற்கின்றன. அதன் காரணமாக ஓர் இனிமை, ஒரு மரியாதை, ஒரு கவர்ச்சி இயற்கையாகவே ஒட்டிக்கொண்டிருக்கிறது.

இந்த அசாதாரண மனித உறவை வயது, இளமை, சூழ்நிலை, மனோபாவம், பழக்க வழக்கங்கள், வாழ்க்கை நெறிகள் என்ற விஷயங்கள் சதா மோதிக்கொண்டிருக்கின்றன. இதை நாம் நன்கு உணர்ந்து செயல்பட வேண்டும். இல்லாவிட்டால் இது மனிதர்களைக் கவிழ்த்துவிடும்.

இதற்காகத்தான் எந்தச் சிறந்த தொழில் ஆலோசனை கூறும் புத்தகத்தைத் திறந்தாலும் சரி, ‘மறந்தும் பாலுணர்வால் உந்தப்பட்டு உறவுகளை வளர்க்காதீர்கள், துவக்காதீர்கள்’ என்று அதிலே ஒரு அத்தியாயம் இருக்கும்.

இளம் வயது சுதந்திரம் நிறைந்த பருவம். புதுமை நாடும் காலம். இனம் புரியாத ரத்த வேகம் நம்மைச் சதா முடுக்கிக்கொண்டிருக்கும் நாட்கள். இளமை வேகத்தில் தூண்டப்பட்டுச் சில உறவுகள் நிச்சயிக்கப் படுகின்றன—சில தற்காலிகமாக, சில நிரந்தரமாக.

பொதுவாக, இளமையின் வேகம் தன்னை ஆட்டு விக்கிறது என்பதை ஒரு இளைஞனால் உணர முடிவ தில்லை—அவனே அதற்குள் இருப்பதால். ஆகவே, தன் முடிவுகளுக்குப் பல காரணங்களையும் சமாதானம் சொல்லிச் செயல்படுகின்றான்.

‘கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒக்கின்
வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல’

என்று வள்ளுவர் கூறியிருப்பதை, 'கண்களினால் பல விஷயங்களைத் தெரிவிக்கமுடியும்' என்ற அர்த்தத்தில்தான் நாம் எடுத்துக்கொள்ளவேண்டும். கண்களினால் மட்டுமே உள்ளத்தைப் பரிமாறிக்கொண்டு துவங்கும் வாழ்வு ஆபத்துகள் நிறைந்தது, அதிர்ச்சிகள் கொண்டது என்று மன இயல் அறிஞர்கள் கூறுவதை நாம் புரிந்துகொள்ளவேண்டும்.

இளமைக்கு அடுத்தபடியாக சூழ்நிலை நமது பாலுணர்வு உறவுகளை வளர்க்கிறது அல்லது பாதிக்கிறது.

## 21

ஒரு பெரிய ஹோட்டலில் டிஸ்கோ நடனத்துக்குப் போகிறீர்கள். மாலை வேளை—உடல் தளர்ந்த நேரம்; உணர்ச்சிகளைத் தூண்டும் இசை...சுயக் கட்டுப்பாடுகளைத் தளர்த்த வைக்கும் எல்லாமே ஒரு மனிதனை ஓர் அசாதாரண உணர்வு நிலைக்கு அழைத்துச் செல்கிறது. ஒரு நான்கு பேர் ஒரு காரியத்தைச் செய்யும் போது ஐந்தாவது நபரும் சூழ்நிலையினால் உந்தப் படுகிறார். சூழ்நிலைகள் நம் நிதானத்தைத் தவறச் செய்கின்றன.

அடுத்து, மனோபாவத்தின் ஈடுபாட்டைக் கவனியுங்கள்.

விலைமாதான தாயின் நிழலில் வளரும் இளம் பெண், குடிகாரத் தந்தையின் நிழலில் வளரும் இளைஞன்—இவர்கள் மாறுபட்ட மனோபாவத்துடன் வளர்வதில் வியப்பில்லை. அப்படி வளர்ந்த ஒரு பெண், சமுதாயத்தின் அடிப்படை நியாயங்களைப் பற்றிக்

கேள்வி எழுப்புகிறாள். சமுதாயம் வைத்திருக்கும் சட்ட திட்டங்களைப்பற்றிக் கேள்வி எழுப்புகிறாள்.

வெள்ளம் வரும் என்று முன்பே தெரியும்போது நாம் தயாராவதுபோல இளமை, சூழ்நிலை, மனோ பாவம் என்ற மூன்றும் தவறான பாலுணர்வு எண்ணங் களை நியாயப்படுத்திவிடும் என்று நாம் உணர்ந் திருந்தோமானால் நம்மை நாம் காத்துக்கொள்ளலாம்.

சமுதாயம், சில உறவுகளை நியாயமான உறவு களாகவும், சில உறவுகளைத் தகாத உறவுகளாகவும் பாகுபடுத்தி இருக்கிறது. மனித உறவுகளில் இந்தத் தெளிவு இல்லாவிட்டால் விலங்கினத்துக்கும் மனித இனத்துக்கும் எந்த வேறுபாடும் இல்லை. சமுதாயத்தின் ஒரு பகுதியான நாம் இந்தப் பாகுபாட்டை எதிர்த் தெறிந்து வாழமுடியாது.

உறவுகளின் இரு பக்கங்களில் இரண்டு பேர் இருக் கிறார்கள். அன்பு. நல்லெண்ணம், வாழ்க்கை நெறி, நியாயம் என்ற அடிப்படைகளைக் கொண்ட செய்தி களைப் பரிமாறிக்கொள்ளும்போது, வாழ்க்கை இசையாகி மலர்கிறது. மாறாக சுயநலம், வெறி, அநீதி, ஏமாற்று, பொய் என்பவை அடிப்படையாக நிலவும் போது இருவருக்கிடையே நிலவும் உறவு சிக்கலாக முடிகிறது. இந்தச் சிக்கல்கள் அவர்கள் கழுத்தையே இறுக்குகின்றன.

ஒரு கம்பெனியில் ஓர் இளம் மேலதிகாரி இருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். சூழ்நிலையால் கவரப் பட்ட ஒரு பெண், முதல்படியாக வழக்கத்துக்கு மாறாக மிகுந்த கவனத்துடன் உடுத்திச்செல்கிறாள். தேவைக்கு மேல் ஒரு சிரிப்பை, ஒரு புன்னகையை, ஒரு சிணுங்கலை, ஒரு சொல்லை உபயோகிக்கிறாள்.

இது மறைமுக உறவுதான்—நிச்சயிக்கப்படாத உறவுதான். எனினும், விளைவுகள் என்ன? அலுவலகத்தில் உள்ளவர்கள் இதைக் கவனிக்கத் தவறுவதில்லை. முதலில் கிசுகிசுக்கத் துவங்குகிறார்கள். பின் தங்கள் வெறுப்பைக் காட்டத் துவங்குகிறார்கள். பின், பொறாமையால் தங்கள் ஒத்துழைப்பைத் தர மறுக்கிறார்கள். ஆக, கம்பெனியின் உற்பத்தி—வேலை பாதிக்கப்படுகிறது.

அரசியலிலும் இப்படிப்பட்ட பாதிப்புகளைக் காணலாம்.

இப்படி வேலை தடைப்படும்போது விஷயம் மேலதிகாரிக்கும் உயர் அதிகாரியாக இருப்பவருக்கும் எட்டுகிறது. பக்கவாட்டில் குடும்பத்துக்கு விஷயம் எட்டுகிறது. இதனால் சுய கௌரவம், பதவிக்கிருந்த பாதுகாப்பு எல்லாம் குறைகிறது.

ஆகவேதான் மனித உறவுகளை—அது நாடக ஒத்திகையாயிருந்தாலும் சரி, நாட்டு நிர்வாகமாயிருந்தாலும் சரி; நிதானமாக—கவனமாகக் கையாளுங்கள் என்று அறிவுரை கூறுகிறார்கள் அறிஞர்கள்.

இதில் மற்றுமொரு விசித்திர விஷயம் இருக்கிறது. சில சமயங்களில் மனித உறவுகளில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு, நடக்கும் விஷயம் புலனாவதில்லை. உதாரணமாக ஒரு மேடைப் பேச்சாளர் பேச வந்த விஷயத்தை விட்டுவிட்டு அங்கு தலைமை தாங்கும் தலைவரை 'காக்காய் பிடிக்கப்' புகழ்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். 'இது தலைவருக்கு மட்டும்தான் எட்டும், பிறருக்குத் தெரியாது' என்ற ரீதியில் அவர் பேசுவார், ஆனால், அங்கு கூடியிருக்கும் ஆயிரமாயிரம்

மக்களோ இந்த அவலத்தை எண்ணித் தலையிலடித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பார்கள்.

அதுபோல, யாருக்கும் தெரியாது என்று தன்னை ஏமாற்றிக்கொண்டு ஒரு மேலதிகாரி காரியங்களைச் செய்தால், அப்பட்டமாக அவரது சுய கௌரவம் கீழே இறங்கிப் போய்க்கொண்டிருக்கும்.

இது அரசியலுக்கும் பொருந்தும்.

பதவி என்ற முக்காடு போதுமான பாதுகாப்புத் தருவதில்லை.

விஸ்கான்சின் பல்கலைக்கழகத்தில் டாக்டர் ஹேரி ஹார்லோ என்ற மன இயல் பேராசிரியர் சில சோதனைகளைச் செய்தார்.

குரங்குக் குட்டிகளைத் தாயிடமிருந்து பிரித்து' தனித் தனிக் கூண்டுகளில் வைத்து வளர்த்தார். ஒரு கூண்டைத் தேங்காய்ப்பூ துண்டு போன்ற துணியால் ஆக்கியிருந்தார். மற்றொன்றைப் பலகையாலும், மூன்றாவதை முட்கள் நிறைந்த இரும்புக் கம்பிகளாலும் செய்திருந்தார்.

வளர்ந்தபின் இந்த மூன்று குரங்குகளும், குரங்கு சமுதாயத்துடன் பழகுவதில் மிகவும் கஷ்டப்பட்டன. மூன்றும் மற்றோர் பெண் குரங்குடன் உடல் உறவு கொள்ளும் விதங்களில் விருப்பமில்லாமல்—ஆர்வம் காட்டாமல் இருந்தன. குறிப்பாக, முட்கம்பிகளுக்குள் வளர்க்கப்பட்ட குரங்கு உடலுறவை அலட்சியம் செய்தது. அதுபற்றி அதற்கு ஏதும் புரியவில்லை. மிகவும் சிடுமூஞ்சித்தனமாக இருந்தது. மாறாக, மிருதுவான துணியின் சூழ்நிலையில் வளர்ந்த குரங்கு ஓரளவு சூழ்நிலையுடன் பழகுவதை விரைவாகக் கற்றுக் கொண்டது.

டாக்டர் ஹேரி ஹார்லோ குறிப்பிடுவது—உடலுறவு என்பது, சூழ்நிலையையும் சமூகத்தையும் பார்த்து நாமாகக் கற்றுக்கொள்வதுதான்.

பிறக்கும்போதே குழந்தை காம உணர்வுகளுடன் பிறப்பதில்லை. உடல் வேறுபாடுகள் தன்னோடு இருந்தாலும் வளரும் குழந்தை ஆண்—பெண் உடல் உடை வித்தியாசத்தைக் கண்டு, அவர்கள் பேச்சைக் கண்டு, பழகும் விதத்தைக் கண்டு, சினிமா, டிராமா, பத்திரிகை, புத்தகம் என்று பல்வேறு சூழ்நிலைகள்மூலம் உடலுறவைப்பற்றிக் கற்றுக்கொள்கிறது. போற்றத் துவங்குகிறது.

உடலுறுப்புகள் இருப்பதையும் வயதில் அது தரும் உத்வேகத்தையும் டாக்டர் ஹார்லோ மறுக்கவில்லை. இவற்றைப்பற்றி சரியாகப் புரிந்துகொள்ளாமல் வளர்க்கப்பட்டவர்கள்—கற்றுக் கொள்ளாதவர்கள்—குடும்ப உறவில் சரியாக இயங்குவதில்லை என்பதுதான் அவர் ஆராய்ச்சி காட்டும் அனுபவம்,

கவனியுங்கள்—நமது மனோபாவம் நம் வாழ்வை நிச்சயிக்கிறது. எப்படி வளர்க்கப்பட்டிருக்கிறோம் என்பது நம் வாழ்வின் கொள்கைகளை, பழக்கவழக்கங் களை நிர்ணயிக்கிறது.

மனித உறவுகளில் இதை நாம் நன்கு புரிந்துகொள்ள வேண்டும். நமது வளர்ப்புமுறை, நாம் போற்றும்பண்பு கள்; நமது மனோபாவம் இவற்றின் பாதிப்பு.

தாம்பத்திய உறவுகளில் ஒரு ஆணோ பெண்ணோ உணர்வில்லாமல் செயல்படுவாரேயானால் நாம் அதன் காரணங்களைப் புரிந்துகொள்ளவேண்டும். அதை மாற்ற, மாற்றங்களை மனத்திலிருந்து துவங்க வேண்டும். நம்பிக்கை, அன்பு என்ற விதைகளை விதைக்கவேண்டும்.

ஒரு மனைவி, தன் கணவனுடன் முன்புபோல் இயங்காதபோது அதுபற்றிக் கேட்ட ஒரு பெண் கூறினாள்: ''அத்தனை பெரிய பார்ட்டியில் அந்த சினிமாக்காரியுடன் பல்லிளித்து நின்றுகொண்டிருந் தீர்களே, எனக்கு அவமானம் பிடுங்கித்தின்றது. எல்லோரும் உங்களிருவரையும் பற்றித்தான் பேசிக் கொண்டார்கள். எனக்கு நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாகலாம் போலிருந்தது. நீங்கள் என்னைத் தொட்டாலே உடல் கூசுகிறது''—மனமாற்றம் எப்படி உடலைப் பாதிக் கிறது என்பதைக் கவனியுங்கள்.

நமது ஊர் மனசிகிச்சை மருத்துவர்களை அணுகி னால் இத்தகைய பிரச்னைகளில் ஒரு நல்ல வழியைக் காட்டுவார்கள். இதுபற்றிச் சில மனசிகிச்சை மருத்து வர்கள் விவரமாக எழுதியிருக்கிறார்கள் தமிழப் பத்திரிகைகளில்.

உறவும் இனிமையும் வாழ்வின் முக்கியமான ஒன்று. இதுபற்றி நாம் கருத்து செலுத்தாமல் துன்பங்களுடன் —மன உளைச்சல்களுடன் 'இதுதான் விதி!' என்று வாழ்வது முட்டாள்தனமாகும்.

ஏன் ஒரு பெண் அல்லது ஆண் சரியாக இயங்குவ தில்லை?

—ஆழமான ஈடுபாடு இல்லாதது.

—குழந்தைகள் பெற்றுக்கொள்ளும் விருப்பமின்மை.

—எனக்கு இது போதும் என்று வெறுத்து ஒதுக்கும் சுய தியாகம்.

—இதை உபயோகித்துப் பிறரைக் கட்டுப்படுத்த முயல்வது. இப்படிப் பல காரணங்களினால் மன உறவு சரியாக அமையாதபோது உடலுறவு தோற்றுப் போகிறது.

ஒரு பத்து ஆண்டுகளுக்கு முன் வரை அமெரிக்காவில் அதிகம் உத்திகள் (Technigues) பற்றி நிறையப் பேசப் பட்டது. நிறையப் புத்தகங்கள் வெளிவந்தன. அவற்றில் சிறந்த புத்தகம் (Joys of sex—Alex comfort) அலெக்ஸ் கம்போர்ட் என்பவர் எழுதிய நூல்.

மேலை நாடுகளில் இப்போது வெளிவரும் நூல்களில் யந்திர நுட்பங்களான உத்திகள்பற்றி அதிகம் எழுதாமல், பரஸ்பர அன்புபற்றியும், ஒருவருக்கொருவர் காட்டும் பண்புகள்பற்றியும், ஒருவரை ஒருவர் அணைத்து அன்பு காட்டுவதைப் பற்றியும் நிறைய எழுதப்படுகிறது. அமெரிக்கர்கள் முன்னேறி வருகிறார்கள்!

மனித உறவை சோதிப்பது நல்லதல்ல. அதிருப்தி, கண்டனம், விமரிசனம் என்று எப்போதும் நாம் ராகம் பாடிக்கொண்டிருந்தோமானால் நமது உறவும் வாழ்வும் முகாரி ராகத்தில்தான் முடியும். நமது அதிருப்தியைப் பக்குவமாகத் தெரிவிக்கக் கற்றுக்கொள்ளவேண்டும். நமது வாழ்க்கைத் துணையை விமரிசிக்குமுன், அதை நம்மைப் பற்றிய சுய விமரிசனமாகத் துவங்கினால் நமது முட்டாள் தனத்தையும், தவற்றை ஏற்றுக்கொள்ளும் நம் பக்குவத் தையும் கண்டு பிறர் எளிதில் திருந்தக்கூடும். வாழ்வு, சகிப்புத் தன்மையிலும், பிளவுகளைப் பெரிதுபடுத்தாத திலும்தான் இருக்கிறது.

''என் மீது உனக்கு அன்பிருக்குமானால். உன் அப்பா வீட்டுக்குப் போகாதே!'' என்பன போன்ற பேச்சுக்களால் அன்பைச் சோதிப்பது சரியல்ல.

வாழ்வில் சின்னச் சின்ன சம்பவங்கள்—வெற்றிகள்—பாராட்டவும் மகிழவும்—நிறைய ஏற்படுகின்றன. அவற்றைப் புரிந்துகொண்டு அதை அனுபவித்து நம் இன்பங்களை நாம் பெருக்கிக்கொள்ள வேண்டும். வாழ்வில் பெரிய சம்பவங்கள் வெகு சிலதான் நடக்கின்றன. ஆகவே, நாம் அதற்காகக் காத்திராமல் அதை எதிர் நோக்கிக்கொண்டு உட்கார்ந்திராமல்—அன்றாட வாழ்வில் நடக்கும் சின்னச் சின்ன நிகழ்ச்சிகளிலும், வெற்றிகளிலும் நாம் மகிழ்ச்சி காண முயலவேண்டும்.

# 22

**'நாம் 90 சதவீதம் பேசுகிறோம். பத்து சதவீதம்தான் கேட்கிறோம்' என்று கண்டுபிடித்தார்கள்.**

முல்லா நசிருதீனுக்குத் தனது கழுதை மேல் ஒரே வெறுப்பு. அதை விற்றுத் தொலைத்துவிடவேண்டும் என்று எண்ணி, சந்தைக்கு எடுத்துச்சென்றார். ஏலம் போடுபவனிடம் கொடுத்து அதை விற்றுத் தரச் சொன்னார்.

ஏலக்காரன் ஏலம் கூவத் தொடங்கினான் : ''இதோ ஒரு அற்புதமான கழுதை, அருமையாகப் பொதி சுமக்கும். ஆச்சரியமான தோழன், போட்டதைத் தின்னும். ஐந்து 'டினார்'களுக்கு இப்படி ஒரு கழுதையை நீங்கள் இந்த உலகத்திலே எங்கும் வாங்க முடியாது!''

—ஏலம் விடுபவன் கழுதையின் பெருமையைக் கூறக்கூற, முல்லாவுக்கு ஒரு உற்சாகம் ஏற்பட்டது, அவரும் விலைக்குக் கேட்க ஆரம்பித்தார். இதனால் விறுவிறென்று விலை ஏறியது. கடைசியில் நாற்பது டினார்களுக்குத் தனது கழுதையையே வாங்கிக்கொண்டு சந்தோஷமாக வீடு திரும்பினார் முல்லா.

"உனது பெருமை எனக்கு இதுவரை தெரியவில்லை. உன்னை விற்க இருந்தேனே!" என்று தன் கழுதையைச் செல்லமாகத் தட்டிக்கொடுத்தார்.

இப்போது அந்தக் கழுதை அவருக்கு மிகவும் பிடித்துப் போயிருந்தது. சண்டிக் கழுதை என்று அதைத் திட்டியவர் எப்படி மாறினார்? ஒன்றுமில்லை, பேச்சுதான். எண்ணப் பரிமாற்றம்தான். தன் கழுதையைப் பற்றிய பல புதிய விஷயங்களைக் கவனமாகக் கேட்டார். தெரிந்தோ தெரியாமலோ தான் செய்யவிருந்த தவறை உடனே திருத்திக்கொண்டார். முல்லா ஒரு முட்டாள் என்று நீங்கள் சிரிக்கக்கூடும். முல்லா ஒரு பெரிய தத்துவ ஞானி. வாழ்வின் ஆழமான அர்த்தங்களை எளிதான வாழ்க்கைச் சம்பவங்கள் மூலம் அவரது கதைகள் நமக்குத் தெரிவிக்கின்றன.

மனித உறவுகளைப் பற்றி எழுதும் அறிஞர்கள், முக்கியமான மூன்று குறைபாடுகள் உறவுக்குக் குறுக்கே நிற்பதாகக் குறிப்பிடுகிறார்கள்.

பிறர் சொல்வதை நாம் கவனமாகக் கேட்பதில்லை. பிறர் சொல்வதன் முழு அர்த்தத்தையும் நாம் புரிந்து கொள்வதில்லை.

தவறு ஏற்படும்போது நாம் அதை உடனே ஏற்றுக் கொள்வதில்லை.

நாம் அதிகமாகப் பேசுகிறோமா அல்லது கேட்கிறோமா என்பதை ஆராய்ந்து ஒரு நிறுவனம் அதன் புள்ளி விவரங்களை வெளியிட்டது: 'நாம் 90 சதவீதம் பேசுகிறோம். பத்து சதவீதம்தான் கேட்கிறோம்' என்று கண்டுபிடித்தார்கள்.

கவனமாகக் கேட்பது உறவுகளை வலுப்படுத்துகிறது. பிறர் பேசும்போது கண்களைப் பரவ விட்டு விட்டுக் கவனிப்பவர்கள் மீது நமக்கு வெறுப்பு ஏற்படுகிறது. ''கேட்டுக்கொண்டுதான் இருக்கேன், சொல்லுங்கோ!'' என்று சொல்லிக்கொண்டே இருபத்தேழு வேலைகளில் ஈடுபட்டுக் கொண்டிருப்பவர்களிடம் நமக்கு மதிப்பு ஏற்படுவதில்லை.

சில சமயம் எனது நண்பரிடம் சில பிரச்னைகளை நான் மனம்விட்டுப் பகிர்ந்துகொள்வதுண்டு. உடனே அவர் கண்ணை மூடிக்கொள்வார். வெற்றிலை போட்ட வாய் அப்படியே நின்றிருக்கும். சுண்ணாம்பைத் தடவிய விரல் அப்படியே நின்றுபோயிருக்கும். அவரது கவனம், அதில் கொண்ட ஈடுபாடு எல்லாம் நம்மைப் பிணைத்து விடும். அதன் விளைவாக வரும் முடிவுக்கு நான் மிகுந்த மதிப்புக் கொடுப்பேன்.

சரியான கருத்துப் பரிமாற்றம் இருக்கும்போதுதான் ஒரு குடும்பம் சந்தோஷமாக இயங்குகிறது. ஒரு நிறுவனம் திறமையுடன் இயங்குகிறது; ஒரு ஆட்சி நலன்களை நாட்டுக்கு நல்குகிறது.

பேச்சு என்பது ஒரு முனை; கேட்பது என்பது மறுமுனை.

எதற்காக மக்கள் பேசுகிறார்கள்? டெலிவிஷன் பெட்டியின் சப்தத்தைக் கடைசிவரை குறைத்துவிட்டு செய்தி அறிவிப்பாளர் என்ன விஷயங்களைச் சொல்லிக்

கொண்டு போகிறார் என்று அனுமானிக்க முடிகிறதா என்று பாருங்கள்.

பேச்சு மூலம்தான் வாழ்வு நடக்கிறது. பேச்சு மூலம் தான் விவரங்களைப் புரிந்துகொள்கிறோம். வாழ்க்கை மேலே போய்க்கொண்டிருக்கிறது. மனித இனத்தை 'சமுதாயமாக வாழ விரும்பும் விலங்கினம்' என்று கூறு வார்கள். அதுபோல, மனிதர்களின் பேச்சு, வாழ்வின்—வளர்ச்சியின்—இன்றியமையாத அம்சமாக இருக்கிறது.

பேசும்போது ஒரு மாற்றம் நிகழ்கிறது. பேச்சின் மூலம் பிறருடைய செயல்களில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்துவதற்காகத்தான் பேசுகிறோம். பிறருடைய கருத்துக்களும் எண்ணங்களும் நம்முடையதைப் போலவே இருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ளும் போது நமக்கு நம்பிக்கை ஏற்படுகிறது.

பேச்சுமூலம் மட்டுமே நாம் விஷயங்களை வெளிப் படுத்துவதில்லை. சில சைகைகள் மூலம், சிறு குறியீடுகள் மூலம், நாமே கண்டுபிடிக்கும் அனுமானங்கள் மூலம் கருத்துப் பரிமாற்றம் நடைபெறுகிறது.

ஷெர்லாக் ஹோம்ஸ் கதையில், ஓரிடத்தில் கொலை நடந்தபோது, 'நாய் குரைத்த சப்தத்தை யாரும் கேட்கவில்லை' என்று அவர் உதவியாளர் வாட்ஸன் விவரிக்கிறார். உடனே 'அன்புள்ள வாட்ஸன்! நாய் குரைக்காமலிருக்கிறது. அதில்தான் விஷயமிருக் கிறது!' என்று துப்பு துலக்குவார் ஹோம்ஸ். குரைக்காத நாய்! பேசாத பேச்சு! ஒரு கை தட்டும் சப்தம்!

பேச்சின் மூலம் மட்டுமே நாம் விஷயங்களைத் தெரிவிப்பதில்லை. பேசாதபோது—பேசாத அந்தச் செயல் சில விஷயங்களைத் தெரிவிக்கிறது. ஒரு வீட்டில்

ஒரு மனைவி மௌனத்தின் மூலம் நடத்தும் சக்தியாக் கிரகம், நாம் எழுதிய கடிதத்துக்குப் பதில் வராததின் அர்த்தங்கள், ஒரு பெண்ணின் புன்னகை அல்லது ஒரு தோளிடிப்பு என்று வார்த்தைகளல்லாத செயல்கள்—குறியீடுகள் சதா நமக்குச் செய்தி சொல்லிக் கொண்டிருக்கின்றன. நமது கவனத்தின்மூலம் நாம் விஷயங்களைக் கிரகித்துக்கொள்கிறோம். அந்த குறியீடுகளை நாம் புரிந்துகொள்ளும் திறன்—கவனம் நமது உறவுகளை வளப்படுத்துகிறது. உறவுகளுக்கு உதவுகிறது. வெளியில் நிலவும் ஆரவாரம், சரியில்லாத சூழ்நிலை, கேட்பவரின் உடல் தளர்ச்சி என்று பல விஷயங்கள் நம் கவனத்தைச் சிதற அடிக்கின்றன.

பிறர் பேசும்போது ஒரு மனிதன் தன்னைப் பற்றித் தான் எண்ணிக் கொண்டிருக்கிறான். எப்படிப் பதிலளிப்பது என்றுதான் தன்னைத் தயார் செய்து கொண்டிருக்கிறான். ஆகவே, பேச்சை பிறர் முடிக்கும் முன்பே இடைமறிக்க நாம் காத்திருக்கிறோம்.

ஒருவர் வளவளவென்று பேசிக்கொண்டு போனால் இடைமறிப்பதில் தவறில்லை.

பிறர் பேசும்போது பேசுபவர்களை எடைபோட முயல்கிறோம். 'என்ன முட்டாள்தனமாகப் பேசுகிறார் மனிதர்' என்று மனத்துக்குள் எண்ணம் ஓடுகிறது. 'ஏன் பேசுகிறார் இப்படி?' என்று நோக்கத்தை ஆராய்கிறோம்.

சில சமயம் பிறர் கூறும் விஷயங்களில் உள்ள முக்கியமான விஷயத்தை மட்டும் கருத்தில் கொள்கிறோம். சில சமயம் முக்கியமான விஷயத்தை விட்டுவிட்டு மற்ற சின்ன விஷயங்களைப் பெரிதாக எடுத்துக்கொள் கிறோம்.

'தமிழ்லேதாங்க பேசறோம், புரிஞ்சிக்க மாட்டேன் கிறானே?' என்று வருத்தப்படுகிறார்கள் பெற்றோர். "நான் என்ன சொன்னாலும் காதிலேயே வாங்கிக் கொள்ளமாட்டார் எங்க அப்பா" என்று வருத்தப் படுகிறான் மகன்.

பிறர் கவனத்தைக் கவர, குரலில் ஏற்றத்தாழ்வுகளை மேடைப் பேச்சாளர் உபயோகிக்கிறார். தமது குரலை உயர்த்திப் பேசுவதன் மூலமும், கண்டிப்பைத் தெரிவிப் பதன் மூலமும் மேலதிகாரி தனது நோக்கங்களைத் தெரிவிக்கிறார்.

பேச்சில் இருக்கும் தெளிவு நமது எண்ணங்களை வெளிப்படுத்துகிறது. ஒன்றுக்கொன்று முரண்பட்ட கருத்துக்களை ஒரு மேலதிகாரி தெரிவிக்கும்போது கீழே பணிபுரிபவர் என்ன செய்வதென்று தெரியாமல் விழிப்பார். அவரும் குழம்புவார், வேலை ஸ்தம்பித்துப் போகும்.

அதே போல், ஒரு நாட்டின் தலைவர் தெளிவான கொள்கைகளைத் தெரிவிக்கவில்லை எனில், அவர் கொள்கைளில் அவருக்கே குழப்பமிருக்கும்போது ஒன்றுக்கொன்று மாறுபட்ட கருத்துக்கள் அங்கிருந்து புறப்படுகின்றன.

இதன் விளைவாக நாடே ஸ்தம்பித்துப்போகிறது.

## 23

ஒரு நாடக அரங்கேற்றம். அதன் தயாரிப்பாளர் பெர்னார்டுஷாவுக்கு எகத்தாளமாக எழுதினார். "இரண்டு டிக்கெட் அனுப்பியிருக்கிறேன், உங்களுக்கும்

உங்கள் நண்பருக்கும்—அப்படி யாராவது உங்களுக்கு இருந்தால்'' என்று. உடனே ஷா பதில் எழுதினார். ''முதல் நாள் அரங்கேற்றத்துக்கு என்னால் வரமுடியாது. வேலை இருக்கிறது. இரண்டாவது நாள் வருகிறேன்—உங்கள் நாடகம் நடந்தால்!''

பிறரைக் குறைத்து மதிப்பிடுவது உறவுகளை மிகவும் பாதிக்கும் விஷயம். அலட்சியப்படுத்துவது, கேவலமாகப் பேசுவது, இழிவாக விமர்சிப்பது, நையாண்டி செய்வது என்பவை கேட்பதற்கு ருசியாக இருக்கலாம். ஆனால் உறவைப் பாதிக்கிற நச்சுக்கள் அவை. அப்படி நடத்தப் படுபவர்கள் அதை மறப்பதில்லை; மன்னிப்பதில்லை.

''பையனுக்குக் குதிரை மூஞ்சி! இந்தப் பையனையா கதாநாயகனாக வைத்து சினிமா எடுக்கப் போகிறீர்கள். நான் அதில் பங்குதாரராக இருக்க விரும்பவில்லை!'' என்றார் ஒரு பட அதிபர். அவர் அந்த இளைஞனை நாடகத்தில் பார்த்ததில்லை. அவன் நடிப்பைப் பற்றிப் பிறர் சொல்லிக் கேட்டதில்லை. பிறகு அந்த இளைஞன் புகழ்பெற்ற நடிகரானார். அந்தப் பட அதிபரே அவரிடம் போய் நிற்கவேண்டியதாயிற்று!

அமெரிக்காவில் ஒரு விவசாயக் குடும்பம். விவசாயத்தையும் மாடுகளையும் பார்த்துக்கொள்ள உதவிக்கு ஒரு இளைஞனை வேலைக்கு வைத்துக்கொண்டார் அந்த வீட்டுத் தலைவர். நாளடைவில் அந்த இளைஞன் வீட்டுக்காரரின் மூத்த பெண்ணைக் காதலிக்கத் துவங்கினான். அந்தப் பெண்ணுக்கும் அவனைப் பிடித்திருந்தது. பெண்ணின் பெற்றோரைப் பார்த்துக் கேட்டான். 'நம்ம பெண்ணுக்கு இவனைவிட நல்ல மாப்பிள்ளை வேண்டும்' என்று எண்ணிய பெற்றோர், அவன் வேண்டுகோளை மறுத்துவிட்டனர்.

முப்பதாண்டுகள் போயின. அந்த இளைஞர் அமெரிக்காவின் ஜனாதிபதியாக ஆகியிருந்தார்!

ஒவ்வொருவரையும் ஆட்டுவிப்பது 'தான்' என்ற நினைவு, பெருமை. அதைப் போய் மண்டையிலடிக்கும் போது மனிதர்களுக்கு 'ரோஷம்' ஏற்படுகிறது. இதைச் சவாலாக எடுத்துக்கொண்டு, நிருபித்துக் காட்டுகிறேன் என்று சொல்லிக் காரியம் ஆற்றுகிறார்கள் சிலர். சில சமயம் "உன்னால் முடியாது!" என்று சொல்லுவதன் மூலம் நம் மகனையோ, மகளையோ உசுப்ப முடியும். ஆனால், பல சமயம் அந்த வடு மனத்திலேயே இருந்து அவர்கள் வாழ்க்கையையே நாசப்படுத்திவிடுகிறது. ஆகவேதான் தவறியும் நாம் யாரையும் கேவலமாகப் பேசுவதோ, நையாண்டி செய்வதோ கூடாது. அதை விட மன ஊனம் விளைவிக்கக்கூடிய செயல் வேறு எதுவும் இல்லை.

கல்யாணமான பெண் முதன்முறையாகச் சமைக்கிறாள். தவறிப்போகிறது. சாதம் குழைந்துபோகிறது. சாப்பிடும் கணவன் தனது அப்பா அம்மா முன்னிலையில், "கோந்து ஃபாக்டரி ஆரம்பிக்கலாம்!" என்கிறான். அந்தப் பெண் அவமானப்படுத்தப்பட்டு மனமுடைந்து போகிறாள். "என்ன, தண்ணி அதிகமாகப் போயிட்டுதா?" என்று மென்மையாகக் கேட்கலாம். "புது அரிசி அதிகம் தண்ணிகொள்ளாது. பழைய அரிசி நிறையத் தண்ணியை எடுத்துக்கொள்ளும். நாளைக்குப் பழைய அரிசியா பார்த்து வாங்கி வரேன்!" என்றும் கூறியிருக்கலாம்.

ஏன் பிறரைக் குறைத்து மதிப்பிடுகிறோம்? பிறரை மட்டம் தட்டும்போது ஏதோ நாம் உயர்ந்தவர் என்ற நினைவு. இது ஒரு ஏமாற்று வித்தை. அரசியல்வாதிகள் பலர் இந்த ஏமாற்று வித்தையை உபயோகித்து ஜீவனம்

செய்கிறார்கள். பொது வாழ்வில் இத்தகைய, 'குறைத்து மதிப்பிடும் போக்கு' நிறையவே இருக்கிறது.

எம். ஜி. ஆர். தி. மு. க.வின் பொருளாளராக இருந்த போது அவர் கட்சியிலிருந்து நீக்கப்பட்டார். "தனி மனிதர்! அவருக்கென்ன கட்சியா இருக்கிறது? ஈ. வெ. கி. சம்பத்தாலேயே ஒரு கட்சியை உருவாக்க முடியவில்லை:" என்று அவர்கள் எண்ணியிருக்கக்கூடும். அவரது பலத்தை —பொதுஜன ஆதரவை—அவர்கள் குறைத்து மதிப்பிட்டார்கள். அவர் அதை மறக்கவில்லை. மன்னிக்க வில்லை.

இந்திரா காந்தி தோற்றுப்போய், ஜனதா ஆட்சி பதவி ஏற்றிருந்த சமயம்.

திருமதி காந்தி ஓர் இடைத் தேர்தலில் நிற்பது என்ற முடிவுக்கு வந்தார். தஞ்சைத் தொகுதியைத் தேர்ந் தெடுத்தார். அப்போது மாநில முதல்வராயிருந்த எம். ஜி. ஆர். இதை ஆதரித்தார்.

ஆனால், சில நர்ட்களில் வழக்கம்போல் அவருக்குச் சந்தேகம் வந்துவிட்டது. 'திருமதி காந்தி நின்று தோற்று, அதனால் எங்கு தன் கட்சியும் பலவீனப்பட்டுப் போகுமோ' என்று பயந்தார். முடிவை மாற்றிக் கொண்டார். அதாவது இந்திராகாந்தியின் பலத்தைக் குறைத்து மதிப்பிட்டார். சொன்ன வார்த்தையைக் காப்பாற்றவில்லை. இதன் விளைவாக, திருமதி காந்தி தஞ்சைத் தொகுதியில் நிற்கவில்லை. இதை இந்திரா காந்தியும் சரி, சஞ்சய் காந்தியும் சரி; நெடுநாள் மன்னிக்கவில்லை, மறக்கவில்லை.

இதே போல் சும்மா இருந்த ஜெயலலிதாவை வம்புக்கிழுத்து, "அவர் அண்ணா தி. மு. க.வில் அமைச்

சராகப் போகிறார்!'' என்று நையாண்டி செய்து எழுதியதன் மூலம், அவர் அ. தி. மு. க.வில் சேரக் காரணமாயிருந்தன, தி. மு. க. ஏடுகள். நையாண்டி, குறைத்து மதிப்பிடுவது, கேவலப்படுத்தும் முயற்சி—இதை ஒரு அரசியல் தந்திரமாக எண்ணி உபயோகித்தார்கள். விடும் கணை சில சமயம் 'பூமராங்காக'ப் போவது அப்போது புரிவதில்லை. அரசியலில் புகுந்து மேடைதோறும் தி. மு. கவைத் தாக்கிப் பேசினார் அவர்!

பிறரைக் குறைத்து மதிப்பிடுவதற்கு—அலட்சியப் படுத்துவதற்கு—நாம் ஆயிரம் காரணங்கள் வைத்திருக்கலாம். ஆனால், மறுகோடியில் ஓர் உணர்ச்சி நிறைந்த மனிதப் பிரகிருதியுடன் விளையாடிக் கொண்டிருக்கிறோம் என்பதை நாம் மறந்துவிடுகிறோம்; மறுகோடியில் தன்மானம் கொண்ட ஒரு ஜீவன் இருக்கிறது என்பதை நாம் மறந்துவிடுகிறோம்.

விமரிசகர்கள், எழுத்தாளர்கள் சகஜமாக இந்தப் 'பாவங்களை' அதிகம் செய்வதுண்டு. சில சமயம் பேனாவைக் குத்தூசியாக உபயோகிக்கும் வாய்ப்புக்களை இவர்கள் தவறவிடுவதில்லை. இந்தக் கட்டுரையாளரும் அதற்கு விலக்கல்ல, மன்னியுங்கள்.

## 24

"**செ**ய்த தவறுகளை ஒப்புக்கொள்ளுங்கள். இது உறவுகளுக்கு நல்லது'' என்று அறிவுரை வழங்குகிறார்கள் சமுதாய இயல் அறிஞர்கள்.

'எல்லோர் முன்னிலையிலும் என்னை ஏற்றுக்கொள்!' என்றோர் பைபிள் வாசகம் இருக்கிறது. எல்லோர்

முன்னிலையிலும் திறந்த மனப்பான்மையுடன் நாம் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையும், செய்யும் ஒவ்வொரு செயலும் முதலில் நம் மனத்தில் ஆழப் பதிந்துபோகிறது. இது சதா நம் நினைவில் இருப்பதால் நாம் சொன்னதை வாழ்வில் தீவிரமாகக் கடைப்பிடிக்கிறோம்.

தவறுகளை ஒப்புக்கொள்வது வளர்ந்த பண்பு. இதனால் நாம் வளரவும் முன்னேறவும் வாய்ப்புகள் பிறக்கின்றன. எந்தக் காரியமும் எப்போதும் தவறில் லாமல் யாரும் செய்தார்கள் என்பதோ, செய்ய முடியும் என்பதோ உண்மையல்ல. 'தவறுவது மனித இயல்பு. மன்னிப்பது தெய்வத் தன்மை.'

ஒரு கணக்குப் போடும்போது ஒரு கூட்டல் கழித்த லில் தவறு இருக்குமானால்கூட சிலர், 'நான் போட்டதில் தவறே இருக்காது' என்று வாதிடுவதைப் பார்க்கலாம். இப்படிப்பட்டவர்கள் தங்களை ஒரு திரும்பிவர முடியாத மூலைக்கு எடுத்துச் செல்கிறார்கள்.

மனித உறவுகளில் நாம் தவறான காரியம் என்று உணரும்போது காரியம் நடந்துபோனதாய் இருக்கும். திருத்த முடியாத நிலை இருந்தாலும், தவறுகளை ஒப்புக்கொள்ளும்போது, நமது மனம் லேசாகிறது; குற்ற உணர்வு குறைகிறது. எதிரியும் மன்னித்து மறந்து விடும் நிலைக்கு இறங்குகிறார். மீண்டும் உறவுகள் சம நிலையில் துளிர்க்கின்றன.

சில சமயம் சில மனிதர்களை எடை போடுவதில் நாம் தவறு செய்கிறோம். நம்பிக்கைக்கு உரியவர்கள் என்று நாம் கருதியவர்கள் நம்பிக்கைக்குப் பாத்திர மில்லாமல் போகும்போது, "இப்படி நம்பிக்கெட்டேனே! என்று வருத்தப்படுகிறோம். வாழ்வில் இத்தகைய

ஏமாற்றங்கள் அடிக்கடி ஏற்படுகின்றன, அந்தச் சமயங்களில் இது உலக இயல்பு என்று எடுத்துக்கொண்டு அடுத்த முறை நாம் சர்வ ஜாக்கிரதையாக இருக்க முயல வேண்டும்.

தவறு நேரும்போது தவறுகளை நாம் திருத்த முயல வேண்டும். 'திருத்தக் கூடியவற்றைத் திருத்தும் துணிவு நமக்கு வேண்டும். திருத்த முடியாதவற்றை ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம் நமக்கு வேண்டும். இரண்டுக்குமுள்ள வித்தியாசத்தைப் புரிந்துகொள்ளும் ஞானம் நமக்கு வேண்டும்.' இத்தகைய பிரார்த்தனை வாசகங்கள் சகஜமாக அமெரிக்க வீடுகளில்—அலுவலகங்களில் மாட்டப்பட்டிருப்பதைக் காணலாம்.

'தவறு செய்துவிட்டேன்' என்று ஏற்றுக்கொள்வதை நாம் சுலபமான விஷயமாகக் கருதக்கூடாது. 'தவறு செய்துவிட்டேன்!' என்று சொல்லிவிட்டு நாம் அலட்சியமாக அடுத்த வேலையைக் கவனிக்க முடியாது.

வாட்டர் கேட் ஊழலில் நிக்சனைப் பற்றிய உண்மை தெரியவரும் முன்பு, தான் தவறு செய்யவில்லை என்று மறுத்துப் பொய்சொல்லி வந்தார் அவர். அமெரிக்கப் பாராளுமன்றம் அவரைக் குற்றஞ்சாட்டி வீட்டுக்கு அனுப்பும் கடைசி நிலை வந்தபோது, 'நான் தவறு செய்துவிட்டேன்' என்று மனிதர் அறிக்கைவிட்டார். அவர் செய்த தவறுக்கு உடந்தையாயிருந்த உதவியாளர்கள் எல்லோருக்கும் சிறைவாசம் கிடைத்தது. 'தவறு செய்துவிட்டேன்' என்று ஆற அமர இப்போதும் சொல்கிறாரே! செய்த தவறுக்கு அவரவர்கள் தண்டனை அனுபவிக்கும்போது, இவரும், தண்டனை அல்லவா அனுபவிக்க வேண்டும்!' என்று பொதுமக்கள் சீறினார்கள்.

தவறுகளுக்குத் தண்டனை கிடைக்காதபோது, தவறு செய்பவர்களுக்கு 'தப்பித்துக் கொள்ளலாம்' என்ற தைரியம் ஏற்படுகிறது. வாய் ஜாலமாகப் பேசி ஊரை மீண்டும் ஏமாற்றிவிடலாம் என்று எண்ணுகிறார்கள். இந்தியாவில் ஊழல், லஞ்சம் என்று ஈடுபட்ட ஒரு நாலைந்து அமைச்சர்கள்மீது மாநிலந்தோறும் நடவடிக்கை எடுத்து, வழக்குத் தொடுத்து சிறைக்கு அனுப்புகிறார்கள் என்று வைத்துக்கொள்ளுங்கள். நாடு எந்த நிலைக்கு உயரும் என்பதை எண்ணிப்பாருங்கள். நியாயத்துக்கும் அநியாயத்துக்கும் உள்ள உறவு சரியாகத் தீர்க்கப்படாதபோது சமுதாயம் பாழ்டைகிறது.

## 25

தவறுகளை ஏன் நாம் ஏற்றுக்கொள்ள மறுக்கிறோம்? நமது சுய கௌரவம்; நமது கௌரவமும் 'இமேஜும்' பாழ்படும் என்று நாமாக நினைத்துக் கொள்கிறோம். அதைக் காப்பாற்றத் தவறுகளை மூடி மறைக்கிறோம். உண்மையிலேயே தவறுகளை ஏற்றுக் கொள்ளும்போது நமது கௌரவம் உயர்கிறது. அமெரிக்காவின் முதல் ஜனாதிபதி வாஷிங்டன் சின்னப் பையனாக இருந்தபோது வீட்டிலிருந்த செர்ரி செடியை வெட்டிவிட்டார். அவர் தந்தை கோபமாக, "இது யார் செய்தது?" என்று கேட்ட போது அவர் தன் செயலை ஒப்புக்கொண்டார். இதனால் வாஷிங்டனுக்கு 'உண்மை பேசுபவர்' என்ற பெருமை ஏற்பட்டது.

பல சமயம் தவறுகளை நாம் உணர முடியாத அளவுக்கு நம்மை ஏமாற்றும் ஒரு 'ஆமாம் சாமி' கூட்டம் நமக்கு அமைந்துவிடக்கூடும். பொதுவாக, பதவியிலிருப் பவர்களுக்கு, அதிகாரிகளுக்கு, அரசியல் தலைவர்களுக்கு

இத்தகைய துர்ப்பாக்கியம் நிறைய ஏற்படுவதுண்டு. தவறுகளை இவர்கள் மாற்றி, “இதனால் நாட்டுக்கு நன்மை” என்று நிரூபித்துக் காட்டுவார்கள். ஆடையில்லாத அரசரைப் பாராட்டிக்கொண்டு புகழ்ந்து கொண்டிருந்தது ஒரு அமைச்சர் கூட்டம். கடைசியில்ஒரு சிறுவன் சொன்னான்: “சேச்சே! ஏன் இந்த ராஜா இப்படி அம்மணமாக இருக்கிறார்” என்று.

சில சமயம் சில தலைவர்களுக்கு இப்படிப்பட்ட ஆமாம் சாமிகள் தேவைப்படுகிறார்கள். ஏனெனில், அவர்களுக்குத் தங்கள்மீதே சந்தேகம் ஏற்படுகிறது; நம்பிக்கை இருப்பதில்லை. இந்த பலவீனத்தைத்தான் ‘கூடியிருந்து குடியைக் கெடுப்போர்’ கெட்டியாகப் பிடித்துக்கொள்கிறார்கள்.

உலக நிலவரங்களையும்—உண்மைகளையும் புரிந்து கொள்ள முடியாத அளவுக்குத் தலைவர்கள் தங்களைத் தனிமைப்படுத்திக் கொண்டு அரண்மனை மாடத்தில் வாழக் கூடாது. நெருக்கடி நிலையை நாட்டில் கொண்டுவந்தபோது இந்திரா காந்தி இப்படித்தான் இருந்தார் என எழுதுகிறார்கள், ‘எஸ் மென்’ (Yes Men) களின் உறவு நமக்குக் குழி பறித்துவிடும்.

“பாராளுமன்றத் தேர்தலில் மக்கள் என் கட்சிக்கு வோட்டுப் போடவில்லை. ஆகவே, மக்கள் நம்பிக்கையை என் கட்சி இழந்துவிட்டது. நான் ராஜினாமா செய்கிறேன்” என்று ஏற்றுக்கொண்ட ராமகிருஷ்ண ஹெக்டேயின் மதிப்பு எப்படி மக்களிடையே உயர்ந்தது என்பதை எண்ணிப்பாருங்கள்.

பொதுவாழ்வை விட்டுவிட்டு, தொழில்துறைக்கு வருவோம்.

அமெரிக்காவில் கால்கேட் கம்பெனியினர் அதிக மாகப் பற்பசையும் சோப்பும் தயாரிப்பவர்கள். அவர் கள் 'ஹெலினாரூபன் ஸ்டைன்' என்ற வாசனை 'சென்ட்' கம்பெனி ஒன்றை 120 மில்லியன் டாலர் கொடுத்து வாங்கினார்கள். வாசனைப் பொருட்களை விற்கும் விதம் வேறு; சோப்புக் கட்டியையும் பற்பசையை யும் விற்கும் விதம் வேறு; கால்கேட் கம்பெனியால் புதிய கம்பெனியை நிர்வகிக்க முடியவில்லை. முடிவில் ஐந்து மில்லியன் டாலருக்கு நஷ்டத்தில் அதை விற்றுத் தொலைத்தனர்!

தவறுகளை உடனடியாக ஏற்றுக்கொள்ளாமல் கடைசிவரை நம்மால் முடியும் என்று சொல்லிக் கொண்டிருந்ததன் விளைவாக, அந்தக் கம்பெனிக்குப் பெருத்த நஷ்டம் ஏற்பட்டது.

ஒரு பெரிய துணி நிறுவனத்தின் தலைவர் சொன்னார்: "துணிமணித் தொழில் எனக்கு நன்கு தெரியும். இதை விட்டுவிட்டு நண்பர்களின் பேச்சைக் கேட்டு ஆந்திராவில் வேறு ஒரு தொழிலில் போய்ப் பணம் போட்டேன். ஏராளமான நஷ்டம் இப்போதெல் லாம் தெரிந்த தொழிலில் மட்டுமே ஈடுபடுவது என்று வைத்துக்கொண்டிருக்கிறேன்."

நஷ்டம், நஷ்டம் என்று தொடர்ந்து வந்தபோது அருகிலுள்ள ஆலோசகர்கள் சொன்னதை எல்லாம் ஏற்றுக்கொள்ளாது 'தன்னால் முடியும்' என்ற ஒரே வீண் வைராக்கியத்தினால் முதலையே இழந்தவர்களின் கதைகளைக் கண்முன்னால் கண்டிருக்கிறேன்.

வெற்றி சிலசமயம் தொடர்ந்து வந்தால், 'எப்போதுமே வெற்றிதான், எதை எடுத்தாலும் வெற்றிதான்' என்று எண்ணி ஏமாந்தவர்களின் கதைகளும் ஏராளம். தொடர்ந்து வரும் வெற்றி, பலவீனங்களை உண்டுபண்ணுகிறது. அந்தப் பலவீனங் களை சர்வ ஜாக்கிரதையாகக் கண்காணித்து நாம் செயல்படவேண்டும்.

தவறு ஏற்படாத வாழ்வு எதுவும் இல்லை. தவறை உணர்ந்து திருந்த முற்படுவதில்தான் முன்னேற்றம் இருக்கிறது. தவறு மனித உறவுகளில் ஏற்படும்போது அதை ஏற்றுக்கொண்டு மன்னிப்புக் கேட்பதில்தான் நல்லெண்ணம் நிலவுகிறது; வாழ்வில் அமைதி கிட்டு கிறது.

## 26

மனித உறவுகளில், நொண்டிச்சாக்கு சொல்வதும் செய்யவேண்டிய காரியத்தைச் செய்யாமல் சப்பைக் கட்டு கட்டுவதும் பிறர் அபிப்பிராயத்தில் நம்மைத் தாழ்த்திவிடுகிறது. பிறர் நம்மைக் கேவலமாகப் பார்க்கக் காரணமாகிறது.

நாம் தெரிந்தோ, தெரியாமலோ தவறு செய் கிறோம். அப்போதெல்லாம் நம் தவற்றை நாம் ஏற்றுக் கொள்வது நல்லது. அந்தச் சமயத்தில் மிக அவமான மாக இருந்த போதிலும் இது நம்மை உயர்த்தும் பண்பாக இருந்து உதவுகிறது. தவற்றை ஏற்றுக் கொள்ளும்போது, விஷயங்களை—சம்பவங்களை மனம் துல்லியமாகக் கணிக்க முற்படுகிறது. இது நமக்கு நாட்பட்டு நின்று உதவுகிறது. தவற்றை மறுப்பவன்

தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்கிறான். சூழ்நிலை களைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியாத மனப் போக்கை வளர்க்கிறான்.

தவறுகளை ஏற்றுக்கொள்வதிலும் ஒரு 'லாவகம்' இருக்கிறது. 'நான் ஒரு முட்டாளுங்க' என்று நம்மைப் பகிரங்கமாகப் பரிகசித்துக் கொண்டோமானால், பிறர் நம்மை மன்னிப்பதை எளிதாக்குகிறோம். நம் தவறுகளை பிறர் நோக்கும்விதம் மனிதாபிமானம் கொண்டதாய் மாறுகிறது. நம்மை நோக்கி நாமே நகைக்கக் கற்றுக் கொள்வது ஆரோக்கியமான மன வளர்ச்சிக்கு வித்திடு கிறது. ஆகவேதான், வாழ்வில் நகைச்சுவை உணர்வு மிக முக்கியம் என எல்லா நிர்வாக அறிவியல் நூல்களும் எழுதுகின்றன.

ஒரு சமயம் முல்லா நசிருத்தீன் பக்கத்து வீட்டுக் கொல்லையில் முள்ளங்கியைப் பிடுங்கிவிட்டுக் கையும் களவுமாய்ப் பிடிபட்டார். நீதிபதி முன் கொண்டு நிறுத்தினார்கள்.

"ஏன் அடுத்தவன் கொல்லையில்போய் நின்றீர்?" என்றார் நீதிபதி.

"காற்று அடித்துக் கொண்டுபோய்த் தள்ளி விட்டது...!" என்றார் முல்லா.

"பின் எப்படி உம் கையில் முள்ளங்கி வந்தது?"

"காற்று என்னைத் தூக்கிக்கொண்டு போகாமலிருக்க முள்ளங்கியைப் பிடித்துக்கொண்டேன்!"

"சாக்குப்பை எப்படி வந்தது உம் கையில்?"

"அதுதான் தெரியவில்லை!" என்றார் முல்லா.

• நமது தவறுகளையும், முட்டாள்தனங்களையும் கண்டு சிரிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

எத்தனை பேர், செய்த தவறுகளை ஏற்றுக்கொள்ள முன்வருகிறார்கள்? வெகு சிலர்தான். அந்தச் சிலர்தான் வாழ்விலும் பிறர் மதிப்பிலும் உயர்ந்து நிற்கிறார்கள்.

வாட்டர்கேட் ஊழலில் பிரசித்தி பெற்ற அமெரிக்க ஜனாதிபதி நிக்சன், தான் செய்த தவற்றை ஒப்புக் கொள்ளாமலே பதவியைவிட்டுக் கீழ் இறங்கினார். நமது ஊர் அரசியல் தலைவர்கள் பலர், தவறுகளை ஒப்புக் கொள்வது தங்கள் அரசியல் 'இமேஜை'ப் பாழ்செய்து விடும் என்று நம்பி வாழ்க்கை நடத்துகின்றனர். ஜனநாயகம் என்று சொல்லிக்கொள்ளும் இன்றைய அரசுகள் நியாயங்களைப் புரிந்துகொள்ளாமல் போராட்டம், கதவடைப்பு, மறியல் என்று வந்தாலொழிய செயல்படாமல் இருக்கும் நிலை நாட்டில் நிலவுகிறது.

ஏன் அரசாங்கங்களும், பெரிய நிறுவனங்களும் பொதுவாகத் தவறுகளை ஏற்றுக்கொள்ள முன்வருவதில்லை? இவை எல்லாம் பெரிய அமைப்புகள் கொண்டவை. பல மட்டங்களில் பலபேரால் நிர்வகிக்கப் படுபவை. ஆகவே, பெரிய நிறுவனம் என்ற அமைப்பில் தன்னை மறைத்துக்கொள்வது எளிது என்ற எண்ணத்தில் அமைச்சர்களும் அதிகாரிகளும் செயல்படுகிறார்கள்.

ரால்ப் நேடர் என்ற ஒரு வழக்கறிஞர் பத்திரமில்லாத கார் என்ற தலைப்பில் ஜெனரல் மோட்டார் கம்பெனியின் காரைப்பற்றி விரிவான ஒரு புத்தகம் எழுதினார். இதனால் அந்தக் காரின் விற்பனை வீழ்ச்சியடைந்தது. மேலும் ஜெனரல் மோட்டார் கம்பெனியின் பெயருக்குப் பெரிய களங்கமேற்பட்டது. இதைப் பொறுக்காத

மோட்டார் கம்பெனியின் தலைவர், இவரை மறைமுகமாகத் தாக்கவும், இவர் ஒரு 'பெண்லோலர்' என்று நிரூபிக்கவும் பலவித—பலவந்தமான உபாயங்களைக் கையாண்டார். ரால்ப்நேடர், மீண்டும் மோட்டார் கம்பெனியின் கீழ்த்தரமான நடவடிக்கைகளை அம்பலப் படுத்தி வழக்குத் தொடுத்தார். நீதி மன்றம் பெரிய அபராதத்தை மோட்டார் கம்பெனிக்கு விதித்தது. அப்போதுதான் மோட்டார் கம்பெனியின் தலைவர் விழித்துக்கொண்டார். தான் செய்ததெல்லாம் தவறு என்று பொதுமன்றத்தில் டெலிவிஷனில் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்.

எவ்வளவு பெரிய தவறு செய்திருந்தாலும்கூட அது நியாயம்தான் என்று மூடி மறைத்து, திரித்து வாதாடும் நமது அமைச்சர்களின் செயல்களை இத்துடன் ஒப்பிட்டுப் பாருங்கள்.

இதனால் என்ன நேர்கிறது?

ஒரு சின்ன விஷயம் அடிமட்டத்திலே களை எடுக்கப் படுவதற்குப் பதிலாக, அமைச்சர்களுக்கும் அரசாங்கத் துக்கும் இதனால் பொதுமக்களிடத்தில் கெட்ட பெயர் வருகிறது. இப்படிப் பலமுறை நடக்குமானால் அரசாங்கம் கேவலமாகக் கருதப்படுகிறது.

தேர்தல்களில் ஒரு கட்சி தோற்றுவிடுகிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். 'தங்களுக்கு அது தோல்வியே அல்ல, வெற்றிதான்!' என்று பேசும் மடமையைத் தமிழ் நாட்டில் மட்டும்தான் காணலாம்! காரணம், அடிப்படை யில் பண்பு இல்லாதவர்கள் கையில் நாம் அரசியலைக் கொடுத்துவிட்டதுதான்.

• இடம் : கிண்டி பொறியியல் கல்லூரி. அப்போது அங்கே மார்லி என்று ஒரு ஆங்கிலோ-இந்தியர் கல்லூரி

முதல்வராக இருந்தார். கிண்டி கல்லூரியின் மாடிப்படிகளில் மகாத்மா காந்தியின் அழகான சலவைக்கல் சிலை. அதற்குக் கீழே ஆங்கிலத்தில் கொட்டை எழுத்துக்களில் எழுதியிருந்தார்கள்: 'நொண்டிச் சாக்குகளில் எனக்கு ஆர்வம் கிடையாது. காரியங்கள் நடந்தாக வேண்டும் எனக்கும்' I am not 'interestedi n excuses. I want things done).

'காரியங்கள் நடந்தாகவேண்டும். சாக்குபோக்குச் சொல்லாதே' என்ற பொருள் ஏதோ பூதாகாரமாகத் தலையிலறைந்தாற் போன்ற ஓர் உணர்வை எழுப்பியது. 'இது வேறுவிதச் சூழ்நிலை. இங்கே வேறுவிதமான தலைவர்!' என்பதைப் புரிந்துகொள்ள வெகுநேரமாக வில்லை.

ஒரு சமயம் டிசம்பர் மாதத்தில் மழை கொட்டு கொட்டென்று கொட்டியபோது, காலை ஏழு மணிக்கு நனைந்த உடையுடன் நான் சோதனைக் கூடத்தில் பாடத்தைத் துவக்கிக் கொண்டிருந்தேன். என் உதவியாளர் முக்கால் மணி நேரத்துக்குப்பின் வந்தார்.

''என்னிடம் குடை இல்லை சார். ஆகவே 'லேட்'. மழை வேறு. மழை நின்றவுடன் வந்தால் இங்கே மார்லி, லேட்டாக வந்தவர்களை எல்லாம் வாசற்படியில் மடக்கிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்!'' என்றார். எனக்குத் திருப்தி நிறைந்த சிரிப்பு வந்தது.

மார்லி சொன்னாராம்: ''உன்னிடம் குடை இருக்கிறதா, இல்லையா என்பது பற்றி எனக்கு அக்கறையில்லை. கல்லூரி ஏழு மணிக்குத் துவங்குகிறது என்றால், ஏழு மணிக்கு ஐந்து நிமிடம் முன்னதாக நீங்கள் இங்கே இருக்கவேண்டும்?''

சாக்குபோக்குச் சொல்வதைப் போன்ற முட்டாள் தனம் வேறில்லை. இழிவு வேறில்லை. நாம் நமது கையாலாகாததனத்தை அதன்மூலம் உலகுக்குப் பறை சாற்றுகிறோம்.

கிறித்துவ மதப் பிரிவில் 'குற்றங்களுக்கு மன்னிப்புக் கேட்டல்' (confessions) என்ற ஒரு முறையை ஏற்படுத்தி இருக்கிறார்கள். தவறும் குற்றமும் நம் மனத்தை உறுத்திக்கொண்டே இருக்கின்றன. நாம் மனதார, மனம்விட்டு மன்னிப்புக் கேட்கும்போது மனம் லேசா கிறது. நாம் விடும் கண்ணீர் நம்மைப் புனிதப்படுத்து கிறது. இந்த ஆழமான அனுபவம் என்றும் நம் நினைவில் நின்று நமக்கு வழிகாட்டுகிறது.

பிறர் தவறுகளை மன்னிக்கும் மனோபாவமும், நம் தவறுகளை ஏற்றுக்கொள்ளும் பண்புகளும் நம்மை உயர்த்துகின்றன. நம் உறவுகளை வலுப்படுத்துகின்றன.

## 27

**'அநாதைக் குழந்தைகளைப்பற்றி ஒரு கணம் யோசித்துப் பாருங்கள். நமது வீட்டுக் குழந்தை ஒன்று அப்படி அநாதை யாகப் போக நேரிட்டால் என்று கற்பனை செய்து பாருங்கள்.'**

கல்கத்தாவில் தெரு ஓரத்தில் ஒரு மனிதன் கேட்பாரற்று செத்துக்கொண்டிருக்கிறான். அவனுக்குத் தன்னால் ஏதும் செய்துகொள்ள முடியாத நிலை. அந்தப் பக்கமாக ஒரு மூதாட்டி செல்கிறார். இந்த ஜீவனற்ற ஜீவனைக் காண்கிறார். அருகே அமர்கிறார். தன் புடவையால் கண்களைத் துடைக்கிறார். வாயில்

கொஞ்சம் தண்ணீர் விடுகிறார். எலும்பும் தோலுமாய் விரிந்த கண்களுடன் இருந்த அந்த மனிதனை எடுத்துச் சென்று, குளிப்பாட்டி, பணிவிடைகளைச் செய்கிறார். எனினும் அந்த மனிதன், நான்கு நாளில் இறந்து போகிறான். அந்த மனிதன் சாவதற்குமுன் கூறிய வார்த்தைகள்: "அம்மா! தெருவில் நாய்போலக் கிடந்தேன். இன்று உங்கள் அன்பினால் தேவனாகச் சாகிறேன்!"—அந்த மூதாட்டிதான் அன்னை தெரசா.

அன்பு, அரவணைப்பு, மனித நேயத்தைத் தேடும் தாகம்—மனிதர்கள் அன்பு காட்டும்போதும் அன்பு பெறும்போதும் நிறைவு பெறுகிறார்கள். அந்த அன்பு அப் பழுக்கில்லாத, எந்த சுயலாபத்தையும் எதிர்பாராத அன்பாக இருக்கும்போது தெய்வீகம் பெறுகிறது. வாழ்வதன் பயனை அனுபவித்த நிறைவு நம்முள் ஏற்படுகிறது.

மனித உறவுகளிலே அன்பு மிக முக்கியமானது. அன்பு காட்டும்போதும், அன்பைப் பெறும்போதும் அது நம்மைத் தொடுகிறது; உயர்த்துகிறது. கையினாலெடுத்துச் சீராட்டித் தாலாட்டப்படாத குழந்தை அதிக நாள் வாழ்வதில்லை. "அணைத்தலும் தாலாட்டுதலும், அன்பைக் காட்டுதலும் குழந்தையிடம் ஒரு மகிழ்வையும் நிறைவையும் உண்டு பண்ணுகிறது. ஆகவே, அது வேகமாக வளர்கிறது" என்று குழந்தை வளர்ப்பு நூல் ஆசிரியர்கள் எழுதுகிறார்கள்.

அத்தகைய அரவணைப்பும் அன்பும் இல்லாது வளர்க்கப்பட்ட ஒரு குழந்தை ஆணாக இருந்தால், மிகுந்த சுயநலக்காரனாக—தன் மனைவியிடம்கூட நடந்துகொள்வான் என்று கூறுகிறார்கள். அப்படி வளர்க்கப்பட்ட ஒரு பெண், தான் பெறாத அன்பை

கவனத்தைப் பிறர்மீது அதிகாரம் செலுத்துவதன்மூலம் ஈடுகட்ட முயல்கிறாள் என்று எழுதுகிறார்கள்.

காதலில் வெறுத்து ஒதுக்கப்பட்டவர்கள் சகஜமாக மற்றவர்களைப்போல் நடந்துகொள்வதில்லை. பழகுவதில்லை. அன்பு பெறாதபோது வாழ்வின் சமதளம் நிலை தவறுகிறது. பலருக்கு மூச்சு, நுரையீரல் சம்பந்தமான நோய்கள் வருகின்றன. அவர்கள் உலகையே—மனித சமுதாயத்தையே வெறுக்கத் துவங்குகிறார்கள்.

அந்த வீட்டின் மூலையில் தூசு படிந்த அரிக்கன் லாந்தர் இருந்தது. ''ஏன், அதைக் கொளுத்துவதில்லையா?'' என்று கேட்டதற்கு, அந்த வயோதிக நோயாளி கூறினார்: ''யாராவது வந்தால் கொளுத்துவோம் என்றிருந்தேன், இதுவரை என் வீட்டுக்கு யாரும் வரவில்லை.'' அவர் குரலிலிருந்த சோகம், மனித தாகம் நெஞ்சைப் பிளப்பதாக இருந்தது. அதைக் கேட்ட அன்னை தெரசாவின் பணிப் பெண்கள் அன்றிலிருந்து இரண்டாண்டுகள் வரை—அந்த மனிதரின் கடைசிக் காலம் வரை—அவரைப் போய்த் தினமும் பார்த்துவிட்டு வந்தார்கள்.

அநாதைக் குழந்தைகளைப் பற்றி ஒரு கணம் யோசித்துப் பாருங்கள். நமது வீட்டுக் குழந்தை ஒன்று அப்படி அநாதையாகப் போக நேரிட்டால் என்று கற்பனை செய்து பாருங்கள். அப்போது உலகக் குழந்தைகள் எல்லாம் நம் குழந்தைகளாகவும், உலக அவலங்கள் எல்லாம் நம்மீது இழைக்கப்படும் கொடுமையாகவும் தெரியும். அநாதைக் குழந்தைகளுக்குச் சோறு போட்டு படிப்பு சொல்லிக்கொடுக்க முன்வருபவர்களும், திக்கற்ற அநாதைப் பெண்களுக்கு விடுதி திறந்து—வாழ வழிகாட்டுபவர்களும், ஏதும் செயலற்ற

வயோதிகர்களுக்கு 'விச்ராந்தி' போன்ற இல்லம் திறந்து அவர்களுக்கு உதவுபவர்களும், அன்பினால் தொடப் பட்டுத் தன்னை மீறிய காரியங்களைச் சாதிக்கிறார்கள். மனித உறவுகளில் அன்பு, நேயம், உதவி, தியாகம் எல்லாம் ஒரு சங்கிலித் தொடர்போல் துவங்குகின்றன.

பிறர் நலம் பேணுதல் என்பது அன்பின் வெளிப் பாடு. அது எந்தச் சுயலாபமும் இல்லாத மனித உறவின் துவக்கம். அதைத்தான் அன்னை தெரசா செய்கிறார். அன்பும், நன்றி உணர்வும் உறவின் இரண்டு பக்கங்கள். அந்தப் பரஸ்பரத் தொடர்பு ஒரு மனிதனி லிருந்து தொடங்கி, ஒரு மனித சமுதாயத்தையே தொடுகிறது. அந்தச் செயல் ஊடே எல்லோரையும் உயர்த்துகிறது. உறவுகள் இந்த அகண்ட பிரபஞ்சத் தையே தொடுகின்றன; இணைக்கின்றன.

மனித சமுதாயத்தில் நம் எல்லோருக்குமிடையே ஓர் உறவு இருக்கிறது. அது கண்ணுக்குத் தெரியாத உறவு. அதை நாம் புரிந்துகொண்டு பலப்படுத்தும் போது நமது வாழ்வு பூரணத்துவம் பெறுகிறது.

எது அந்த உறவு?

அதை எப்படிப் பலப்படுத்துவது?

படித்தவர்கள் படிக்காதவர்களுக்கும், இருப்பவர் இல்லாதவர்களுக்கும், வலிவுள்ளவர்கள் நலிந்தவர் களுக்கும் நம் தேவைக்கு மீறியதைச் செய்யும் அன்பு தான், உதவிதான் நம்மை உறவுகளால் பிணைக்கிறது. உயர்த்துகிறது.

ஜிம்மி கார்ட்டர், அமெரிக்காவின் முன்னாள் ஜனாதிபதி. அவரும் அவர் மனைவியும் நியூயார்க்கில் வாழும் ஏழைகள் வீடு கட்டிக்கொள்ள உதவுகிறார்கள்.

கார்ட்டர் அங்கே சுவர் எழுப்புகிறார்; ஆணி அடிக்கிறார்! கூரை போடுகிறார். எல்லாக் கொத்துவேலை, தச்சுவேலை எடுபிடிவேலைகளும் செய்கிறார் கார்ட்டர். அவர் செய்யும் நல்ல காரியம் மிகப் பலரையும் ஈர்த்து ஏழைகளுக்கு வீடு கட்டிக்கொடுக்கும் ஒரு திட்டத்தை உருவாக்கியது நியூயார்க்கில்.

'நான் எனக்காக மட்டுமே வாழப்போவதில்லை' என்று தீர்மானிக்கும்போது அங்கே நமது படிப்பு இல்லை; பதவி இல்லை; படாடோபம்—போலித்தனம் இல்லை. பிறரை நேசிக்கும் ஆத்ம தாகம்—மனிதப் பிறவியின் அடிப்படை உணர்வு—அங்கே செயல்படுகிறது.

நியூயார்க் நகரில், கறுப்பு மக்கள் சில பகுதிகளில் அதிகம். நீக்ரோ இளைஞர்கள் ஒரு பிடிப்புடன் படிப்பைத் தொடர்ந்து முடிப்பதில்லை. படிப்பில் பொதுவாக அக்கறை செலுத்துவதில்லை. படிப்பைப் பாதியிலேயே விட்டுவிட்டு, வாழ்வில் ஏதும் நோக்கமின்றி சோர்வாக வாழ்க்கையை வீணடிப்பது பெரும்பாலும் நடக்கும் விஷயம். ஆனால், ஒரு பள்ளிக்கூடத்தில் மட்டும் இதற்கு மாறுபாடாக விஷயங்கள் நிகழ்ந்தன. மாணவர்கள் ஒழுங்காக வந்தார்கள்; ஆசையுடன் படித்தார்கள்; சந்தோஷத்துடன் பழகினார்கள். 90 சதவீத மாணவர்கள் படிப்பைத் தொடர்ந்து படித்து வெற்றியுடன் முடித்தனர்.

இப்படி ஒரு பள்ளி வித்தியாசமாக இருப்பதன் காரணத்தை ஆராய்ந்ததில், அங்கே ஓர் ஆசிரியப் பெண்மணி இதற்குக் காரணம் என்பது தெரிந்தது. அவர் சற்று வயதானவர். அங்கு படித்த ஒவ்வொரு மாணவரிடையும் அன்பைப் பொழிவார். அக்கறையுடன் விசாரிப்

பார். ஏதாவது உதவ முடியுமானால் உடனே செய் வார். மாணவர்கள்மீது நம்பிக்கை வைத்தார். இந்த அவரது செயல், மாணவர்களிடையே ஒரு மகத்தான மாறுதலை உண்டுபண்ணியது. அந்தப் பெண்மணி வைத்திருக்கும் அன்புக்காக, நம்பிக்கைக்காக மாணவர் கள் தங்களையே மாற்றிக்கொண்டனர். இது அன்பு செய்த அதிசயம்.

அன்பைப்பற்றி எழுதும்போது கடைசியாக ஒரு சின்ன விஷயத்தையும் சொல்லவேண்டும். தார்ன்டன் ஒயில்டர் என்ற பிரபல எழுத்தாளர், ஒரு நாவல் எழுதி யிருந்தார். அதில், வயது வந்த ஒரு பெண் தனது பன்னிரண்டாவது வயது பிறந்த நாளை மீண்டும் கொண்டாடி மகிழ வேண்டுமென விரும்புகிறாள். அந்த ஆசை ஈடேறுகிறது!

கதாநாயகி மீண்டும் பன்னிரண்டு வயதுப் பெண்ணாக மாறுகிறாள். பிரமாதமான உடைகளை அணிந்துகொண்டு மாடிப் படிகளில் இறங்கி வருகிறாள், "அம்மா என்னைப் பார்!" என்கிறாள் மகள். அம்மா, பிறந்தநாள் 'கேக்' செய்வதில் மும்முரமாய் ஈடுபட்டிருக் கிறார். "அப்பா, என்னைப் பாருங்கள், எத்தனை அழகாக இருக்கிறேன்!" என்றாள் மகள். அப்பா, மகளுக்காகப் பரிசுகொடுக்கப் பணத்தை எண்ணிப் பையில் போட்டுக்கொண்டிருக்கிறார்.

கதாசிரியர் கூறாமல் கூறுகிறார் : நாம் நிகழ்காலத் தில் வாழ்வதில்லை. அன்பு செலுத்தும் முக்கிய நோக்கை மறந்துவிட்டு, பிற அலங்கார விஷயங்களில் கவனம் செலுத்துகிறோம். வாழ்வின் தாத்பரியத்தைப் புரிந்து கொள்வதில்லை!

நாம் எல்லோரும் சோதித்துக் கொள்ளவேண்டிய விஷயம் இது. நிகழ்காலத்தில் வாழ்கிறோமா? நம்

குழந்தைகளிடத்திலும், மனைவியிடத்திலும் பெற்றோரிடத்திலும், அண்டை வீட்டுக்காரர்கள், நண்பர்களிடத்திலும் இன்று என்ன தனியாக நம் அன்பைத் தெரிவித்தோம்? தெரிவிக்க முயன்றோம்?

# 28

**சி**ல காலங்களில், சில நேரங்களில், நமக்கு எதிலும் ஒரு பிடிப்பற்ற தன்மை ஏற்படுவதுண்டு. அது சாதாரண அலுப்பாகத் துவங்கும்; கடைசியில் விரக்தியாக முடியும். 'வாழ்வில் என்ன சாதித்தோம்?' என்ற கேள்வி நமக்குள் எழும்!

வாழ்வில் இப்படி இதுபோல அடிக்கடி நேரும் என்பதை நாம் உணரவேண்டும். (Awareness) இது வளர்ச்சியின் வித்து. வாழ்வின் ஒரு பகுதி. குடும்பம் நடத்திக்கொண்டிருந்த என் நண்பர் ஒருவர், திடீரென்று 'தற்காலிக காஷாயம்' வாங்கிக்கொண்டு எங்கோ தலைமறைவாகப் போய்விட்டார். அவரது மனைவியும் குழந்தைகளும் 'நாம் என்ன தவறு செய்தோம்?' என்று குமைந்து போனார்கள். அலுவலகத்தில் எதிலும் ஈடுபடாது, வெறுப்புற்று நாட்களை ஓட்டுபவராக மாறியவரைப் பார்த்து மேலதிகாரி மற்றவர்களிடம் கேட்டார். "இந்த மனிதருக்கு என்ன வந்தது, திடீரென இப்படி ஆகிவிட்டாரே!" என. ஆங்கிலத்தில் இதை 'எரிந்து போதல்' (Burn-Out) என்று ஒரு புதிய பெயரிட்டு அழைக்கிறார்கள். அதாவது, துடிப்பாக எரியும் ஜீவதீபம் மங்கி அணைந்து விடுகிறது. இதன் காரணத்தைத் தமிழிலே 'செக்கு மாட்டு அனுபவம்' என்று கூறலாம்.

தினம் செய்வதையே செய்து செய்து வாழ்வைச் செக்கு மாடு போல ஆக்கிக்கொள்ளும்போது வாழ்வு என்னும் ஒரு மகத்தான அனுபவத்தை நாம் தோற்கடிக்கிறோம். ஆகவேதான் அத்தகைய நேரங்களில் ''புதிய புதிய ஈடுபாடுகளைக் கொள்ளுங்கள். புதிய மனிதர்களை, புதிய சம்பவங்களை புதிய அனுபவங்களைச் சந்தியுங்கள். வாழ்வில் புதிய சவால்களை மேற்கொள்ளுங்கள்'' என்று மனவியல் அறிஞர்கள் அறிவுரை கூறுகிறார்கள்.

உறவுகளில் சிக்கல் எழும்போது தடங்கல் தோன்றும்போது, மனவருத்தம் மிகும்போது, தவறு செய்த உணர்வு நம்மைத் தாக்கும்போது அதை உள்ளத்திலேயே போட்டு மனத்தைக் கஷ்டப்படுத்தி விஷயத்தைப் பெரிதுபடுத்தாதீர்கள். யாரிடமாவது சென்று மன உளைச்சலை, பாரத்தை இறக்கிவையுங்கள். யாரிடம் நமக்கு மிகுந்த மரியாதை உண்டோ, யார்ருக்கு நம்மிடம் அக்கறை அதிகமோ, யார் நமது விஷயங்களைப் பொறுமையுடன் கேட்டு அனுசரணையுடன் அணுகுவார்களோ அவர்களோடு சுமைகளைப் பகிர்ந்துகொள்வது நல்லது.

நாம் ரயிலில் போகிறோம்; 'ஒரே ஒரு முறைதான் இந்த மனிதரைச் சந்திக்கப் போகிறேன்! ஆகவே, என்ன வந்தது!' என்று உறவுபற்றி நாம் தீர்மானிப்பது மிக முட்டாள்த்னம் என்கிறார்கள் மனவியல் அறிஞர்கள். ஏனெனில், இந்த அணுகுமுறை ஓர் உணர்வற்ற மனிதனை நிரந்தரமாக உருவாக்கிவிடும் அல்லது சுயநலம் மிகுந்த போக்கை நம்முள் அதிகம் வளர்த்து விடும். மேலும், உலகில் யார் யாரை எந்தெந்த நிலைகளில் மீண்டும் நாம் சந்திக்க நேரிடும் என்று

சொல்லமுடியாது. பஸ்ஸில் போகும்போது அருகில் நிற்பவர் இடித்தார் என்று அவரை முறைத்துத் திட்டி விட்டுப் போகும்போது, பத்து மணிக்கு அந்த மனிதரையே நாம் தேடிக்கொண்டிருக்கும் வேலைக்கு ஆள் எடுக்கும் கம்பெனியின் தலைவராகச் சந்தித்தோமானால், நிலைமை எப்படி இருக்கும் என்பதை ஒருகணம் கற்பனை செய்து பாருங்கள். ஏழை, கறுப்பன், படிப்பில்லாதவன், கிழவர், குழந்தை என்ற பாகுபாடுகளை மனத்தில் கொள்ளாது மற்றொரு மனித ஜீவனுடன் பழகும் ஒரு நல்ல மனோபாவத்தை நாம் வளர்த்துக் கொள்வது நல்லது.

'நமது மனைவிதானே' என்று அலட்சியப்படுத்தாதீர்கள். 'நமது பிள்ளைதானே' என்று கேவலமாகப் பேசாதீர்கள். நம்மிடம் வேலை செய்பவன்தானே என்று செய்யமுடியாத வேலைகளைச் சுமத்திக் கொடுமைப் படுத்தாதீர்கள். வெவ்வேறு சந்தர்ப்பச் சூழ்நிலைகளால் வெவ்வேறு நிலையில் உங்களைச் சுற்றி ஒரு மனித உலகம் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. அதை மதித்து நாம் நடந்து கொள்ளும்போது நாம் என்றும் உயர்ந்து நிற்போம். வாழ்வில் வண்டி ஓடத்தில் ஏறுகிறது; ஒருநாள் ஓடம் வண்டியிலேறுகிறது. நமக்குப் பல நிலையில் கீழே இருந்தவர்கள் காலப்போக்கில் முக்கியமான பதவிக்கு உயர்வது உலக அனுபவம். நடைமுறை சாத்தியம்.

நமது உணர்வுகளை நாமே புரிந்துகொள்வது நமது வளர்ச்சிக்கு மிக அவசியம். ஒரு மனிதருடன் பழகும் போது எத்தகைய உணர்வுகள் நம்முள் எழுகின்றன. ஏன் எழுகின்றன என்பதை நன்கு உணர்ந்து கொண்டோமானால், குருட்டாம்போக்காக உறவுகளை நாம் கையாள

மாட்டோம். அல்லது உணர்ச்சி வசப்பட்டு எந்தக் காரியத்தையும் நாம் செய்ய முற்பட மாட்டோம்.

ஒருசமயம், காரிலிருந்து ஒரு பெரிய மனிதரைப் பார்க்க வருமாறு என்னைக் கூப்பிட்டார்கள். "நம்மை மதித்து நம் வீட்டுக்கு வராத மனிதரை—காரில் உட்கார்ந்திருப்பவரை—நான் சென்று பார்க்க விரும்பவில்லை" என்று கூறினேன். வந்தவர், "ஐயாவுக்கு இரண்டு காலும் விளங்காது. நடக்க இயலாது. தாங்கும் தடியை எடுத்துவரவில்லை. அதனால்தான் உங்களை வரச்சொன்னார்கள்!" என்றார். எனது ஆணவம் சிறுத்துப் போயிற்று. ஆண்டவன் நமக்குக் கால் கொடுத்திருக்கிறாரே என்று நன்றியுடன் அவரைப் போய்ப் பார்த்தேன்.

ஆகவேதான் எந்த விஷயமும் எவ்வளவு கோபத்தை அல்லது மாறுபட்ட உணர்வை எழுப்பினாலும், இதற்கு வேறு ஒரு பக்க விளக்கம் இருக்கலாம் என்ற ஒரு மன்னிக்கும் மனோபாவம்—பெருந்தன்மை—நம்மிடம் நிலவவேண்டும். மேலும், "கௌரவம் என்பது பிறர் தருவதல்ல. நம்மை நாம் எப்படி எடுத்துக் கொள்கிறோம் என்பதில்தான் கௌரவம் இருக்கிறது. பிறர் அவமதித்தால்கூட நம்மை அது ஒன்றும் செய்யமுடியாத ஒரு நிலை உண்டு" என்பதை நாம் உறவுகளில் உணர வேண்டும்.

அடுத்து, உறவுகளில் நாம் சகஜமாகக் காணக்கூடிய ஒரு தன்மை இருக்கிறது. சிலர் மிகக் கஷ்டப்பட்டு ஒரு நிறுவனத்தில் வேலை பெற்றிருப்பார்கள். ஆறு மாதம், ஓராண்டு காலம், தேனிலவுப் பயணம் போல் அங்கே வேலை பார்ப்பதைப் பற்றிப் பெருமையுடன் கூறுவார்கள். பின், என்றாவது ஒரு நாள் 'மேலதிகாரி லீவு தர

மறுத்தார்' என்பதை வைத்துக்கொண்டு நிறுவனத்தைப் பற்றி—அதில் உள்ள குறைகளை எல்லாம் எடுத்துப் பட்டியல் போடுவார்கள். குறை சொல்லத் துவங்குவார்கள். ஓய்ந்த நேரத்தில், பிற தொழிலாளர்களைச் சந்திக்கும் நேரத்தில் இப்படிப் பேசத் துவங்கும் மனிதர் அந்த நிறுவனத்தைப் பற்றித் தாழ்வான அபிப்பிராயத்தை—எல்லோரிடத்திலும் ஒரு கெட்ட அபிப்பிராயத்தை உருவாக்க முயல்வார்.

அத்தகைய மனிதர் அந்த நிறுவனத்தை விட்டு விலகும் நாள்—விலக்கப்படும் நாள்—அதிக தூரத்தில் இல்லை. ஏனெனில், நமது அதிருப்தி அதன் பலனைக் கொடுத்துவிடும். நமது வெறுப்பு மூடி மறைத்து வைக்க முடியாத விஷயம். எந்த நிறுவனம் நமக்குச் சோறு போடுகிறதோ, எந்த நிறுவனத்தின் உப்பைத் தின்று நாம் ஜீவனம் செய்கிறோமோ, அதற்கு நாணயம் இல்லாமல் நம்பிக்கைத் துரோகம் செய்யாதீர்கள். கூட இருந்து குழி பறிப்பதைப்போல் ஒரு கேவலமான செயல்—ஓர் இழிவான செயல் எதுவுமில்லை. செத்த பிறகு நரகத்துக்குப் போவதற்குப் பதிலாக, வாழ் நாளிலேயே சொந்த வாழ்வில் அதன் பலனை இவர்கள் அனுபவிக்க நேரிடும்.

இப்படி, 'கூட இருந்து குழிபறிக்கும் மனோ நிலையை' உறவுகளில் மறந்தும் பயில முயலாதீர்கள். பிடிக்காதபோது உடனே விலகி விடுங்கள். விலக முடியாதபோது, நன்றியுடன் செயல்படுங்கள்.

கடைசியாக ஒரு சிறு சம்பவம். ஒரு உறவினர் வீட்டுக்குப் போயிருந்தேன். உறவினர் மிகுந்த அன்புடன் என்னைத் தங்கிவிட்டுப் போகச் சொன்னார். எனக்குத்

தங்க முடியாத நிலை, அவசியமாகப் போக வேண்டிய அவசரம். என் உறவினரிடம் சொல்லிக்கொள்ள நேர மில்லை. காரணம், அவர் கடைக்குப் போய்விட்டார். அவரிடம் சொல்லிவிடுமாறு கணக்கப்பிள்ளையிடம் கூறிவிட்டு நான் கிளம்பினேன்.

மறுமுறை நான் என் உறவினர் வீட்டுக்குப் போன போது அந்த அற்புத மனிதர் அங்கே இல்லை. காலமாகி இருந்தார். அவரது கணக்கப்பிள்ளை எனக்குப் பணி விடைகளைச் செய்தவண்ணம், ''சென்ற முறை உங் களைத் தங்கி இருக்குமாறு சொல்ல ஐயா இருந்தார் கள். அப்படிச் சொல்ல இன்று ஐயா இல்லை!'' என்றார்; என் கண்கள் கலங்கின.

நண்பர்களே! மனித உறவுகள் மெலிதானவை. நுட்பமானவை. யார் யாருக்கு அன்பு காட்ட முடியுமோ, நல்ல வார்த்தை சொல்ல முடியுமோ, உதவ முடியுமோ அதை இருக்கும் போதே—முடியும் போதே செய்து விடுங்கள்.

முற்றும்

நம்பு தம்பி ! நம்மால் முடியும் !!
நம்மால் இந்த சமுதாயத்தை மாற்ற முடியும் !

நாடு நலம் பெற, வளம் பெற :

# மக்கள் சக்தியை இயக்கமாக்குவோம் !

ஒத்த உள்ளம் உடையவர்கள் எல்லாம் ஒன்று திரண்டால், திட்டமிட்டு செயல் பட்டால், இது எனது நாடு, இவர்கள் எனது மக்கள், என்ற உணர்வுடன் பொதுவாழ்வில் ஈடுபட்டால் நிச்சயம் ஒரு புதிய தமிழகத்தை நம்மால் உருவாக்க முடியும்.

சமுதாய, அரசியல் விழிப்புணர்ச்சியை எல்லாத் தரப்பு மக்களிடமும் ஏற்படுத்துவதன் மூலம் ஒரு நல்ல சமுதாயத்தை நாம் உருவாக்க வேண்டும். தொழிலையும், உற்பத்தித் திறனையும் பெருக்கி, நாட்டு மக்களது சராசரி வருமானத்தை அதிகப்படுத்த வழிவகைகள் காண வேண்டும். நேர்மை, தூய்மை, சேவை என்ற மனோபாவங்களை மக்களிடையே பரப்ப வேண்டும். சுய வளர்ச்சி சுய பொருளாதார மேம்பாடு, சமுதாய ஈடுபாடு என்ற மூன்றின் மூலமும் தனி மனிதனை ஒரு புதிய சமூகத்தின் உயர் குடி மகனாக நாம் உருவாக்க முடியும்.

'மக்கள் சக்தி இயக்கம்' மனிதனை முழு மனிதனாக்கும் முயற்சி. சமுதாயம் முழு

வதையும் தொட்டு உயர்த்தும் பணி. நிரந்தர மான வளமான வாழ்வை எல்லோரும் பெறுவ தற்கான தொலைநோக்குப் பார்வையும் சங்கற்பமும் இதன் உட்பொருள்.

ஒரு சமுதாயத்தை மாற்றி அமைப்பது என்பது ஒரு தனி மனிதன் செய்து விடக் கூடிய காரியமல்ல. சமுதாய ஈடுபாடு கொண்டவர்களின் எண்ணங்களாலும் கற்பனைகளாலும், முயற்சிகளாலும் தான் ஓர் இயக்கம் வலுப்பெறுகிறது. "உறுப்பினர் களாய்ச் சேருங்கள்." நமக்கும், பிறருக்கும், இந்த நாட்டுக்குமாக நம் வாழ்வை அர்ப்ப ணித்துக் கொள்வோம். வாழ்வில் நிறை காண்போம்.

இன்று தமிழகம் பூராவும் எல்லா மாவட்டங்களிலும், பல ஊர்களிலும் இயக்கம் செயல்படுகிறது. பங்கு பெற உங்களை அழைக்கிறோம்.

## இயக்கப் பத்திரிக்கை

நம்பு தம்பி நம்மால் முடியும் மாதப் பத்திரிக்கைக்கான ஆண்டுச் சந்தா 15 ரூபாய். மக்கள் சக்தி இயக்கத்தில் என்ன நடக்கிறது, என்ன செய்யலாம் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.

முகவரி : தலைமையகம் மக்கள் சக்தி இயக்கம் 50, கண்ணதாசன் சாலை சென்னை — 600 017.

